



# சங்க இலக்கியத்தில் சமுதாயக்காட்சிகள்

ப. ஜீவானந்தம்



# சங்க இலக்கியத்தில் சமுதாயக் காட்சிகள்



ப. ஜீவானந்தம்

NCBH

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்.,
6, நல்லதம்பி செட்டித் தெரு,
சென்னை-600 002.

# பதிப்புரை

சங்க கால புலவர்கள் இயற்றிய பாடல்கள் சிலவற்றை தேர்ந்தெடுத்து அக்கால சமுதாய நோக்கு இப்புலவர்களிடம் எவ்வாறு காணப்பட்டது என்பதனை சுவைத்துக் காட்டியும், அவர்கள் படம் பிடித்துக் காட்டிய சமுதாயக் காட்சியினையும் தோழர் ஜீவா கருத்துச் செறிவுடன் இந் நூலில் சித்தரித்துள்ளார்.

பசியும், நீங்காத பிணியும், வெளிப்பகையும், இன்ன பிற தீங்குகளும் ஒழிய வேண்டும் என்று வலியுறுத்திக் கூறும் 'நாடு' என்னும் குறள் அதிகாரத்தையும் இதில் ஆராய்ச்சி செய்துள்ளார் ஜீவா.

'சங்க இலக்கியத்தில் சமுதாயக் காட்சிகள்' எனும் இச்சிறு நூல், சங்க கால புலவர்களின் சமுதாய நோக்கினை அறிவதற்கு நல்வாய்ப்பினைத் தருகிறது.

—பதிப்பகத்தார்

# பொருளடக்கம்


பக்கம்

*சமுதாயக் காட்சி—1*
தொல்காப்பியர் .... 5

*சமுதாயக் காட்சி—2*
பிசிராந்தையார் .... 9

*சமுதாயக் காட்சி—3*
இளம்பெருவழுதி .... 14

*சமுதாயக் காட்சி—4*
நக்கீரர் .... 19

*சமுதாயக் காட்சி—5*
சோழன் நல்லுருத்திரன் .... 23

*சமுதாயக் காட்சி—6*
கோப்பெருஞ்சோழன் .... 28

*சமுதாயக் காட்சி—7*
கணியன் பூங்குன்றனுர் .... 33

*சமுதாயக் காட்சி—8*
மதுரை ஆசிரியர் நல்லந்துவனுர் .... 38

*சமுதாயக் காட்சி—9*
காப்பியாற்றுக் காப்பியனுர் .... 42

*சமுதாயக் காட்சி—10*
பக்குடுக்கை நன்கணியார் .... 45

*பமிழ் அமிழ்தம்—குறுந்தொகைக் காட்சி* .... 48

*தமிழ் இலக்கியத்தில் கருத்துப் புரட்சி* .... 51

*தாட்டாளி பற்றி தமிழ் இலக்கியப் பார்வை* .... 61

*வள்ளுவர் நாடு எது?* .... 68

## சமுதாயக் காட்சி-1

படம் பிடித்தவர்:

# தொல்காப்பியர்

**வா**னத்தில் கழுகு தன்னேரின்றிப் பறப்பது போன்று சிந்தனை சிறகடித்துப் பறந்தது. பருந்துப் பார்வை வெட்கித் தலைகுனிய, நுண்மாண் நுழை புலத்தோடு சர்வாம்சப் பார்வை சமுதாயச் சூழ் நிலையை ஊடுருவிப் பாய்ந்தது.

அவன் மேதை. இலக்கியங்களை யெல்லாம் கண்டு இலக்கணத்தைப் பேராற்றலுடன் படைக்க வல்ல மாமேதை. வாழ்க்கை இலக்கியத்தை—மனித குலத்தின் வாழ்க்கை இலக்கியத்தை—ஈடு இணை யற்ற விதத்தில் துருவி ஆராயவல்ல மேதை.

ஆயிரம் ஆயிரம் ஆண்டைய அனுபவ வளம் கொழித்தத் தமிழ் சமுதாயம் பெற்றெடுத்த சான்றோன் அவன்.

கல்வி, சிந்தனை, அனுபவம் ஆகியவற்றில் அவனது மரபு செழுமையும் கொழுமையும் மிக்கது; அவனும் செழுமையும், கொழுமையும் மிக்கவன்.

இத்தகைய பெரியோன் தனது சூழ்நிலையைத் துருவி ஆராய்ந்தான்.

தமிழறிஞர் யாவரும் இறைஞ்சி வணங்கும் அந்த மதிநலமிக்க தமிழ் வல்லான், தான் கண்டு

தெளிந்த எண்ணற்ற சமுதாயக் காட்சிகளை நமக்கு அருமையருமையாகப் படம் பிடித்துக் காட்டு கிறுன். அந்தக் காட்சிகளில் ''உள்ளியதெல்லாம் உயர்வுள்ளும்'' மனிதனின் சிந்தனைச் சிகரத்தைத் தொடும் காட்சியைக் காட்டுகிறுன்:

தலைவனும் தலைவியும் இல்லறத்தில் இணைந்தார்கள்; தேனும் பாலும் கலந்த வாழ்வில் இன்பக் கடலாடினுர்கள்; ஒரு விநாடியில் ஒரு யுகத்தைச் சுவைத்தார்கள்; இருவருந்தான் உலகமென வாழ்ந்தார்கள். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடியும் திண்டோளனும் மாறிமாறிக் கண்டார்கள்.

அடுத்த படி ஏறினுர்கள்.

குழலையும், யாழையும் கசந்து போகும்படிச் செய்த மழலைச்சொல் செவிமடுத்துப் பரவசமடைந்தார்கள். இந்தத் தாயும் தந்தையும் மக்கள் மெய் தீண்டி உடலின்பத்தையும் மற்று அவர் சொற் கேட்டு செவியின்பத்தையும் வாழ்வு நிறைய நுகர்ந்தார்கள்.

குழந்தைகள் கட்டிளங் காளைகளாகவும், நங்கை நல்லாராகவும் வளர்ந்து, நிமிர்ந்து, இல்லறத்தில் ஈடுபட்டார்கள். பெற்றோர்களைப் பேணிக் காத்தார்கள். ''மூவா மருந்து'' போன்று 'ஏவா' மக்களாகத் திகழ்ந்தார்கள். பெற்றோர்களின் முதிர்ந்த வாழ்க்கைக்குக் கற்கோட்டையும், இரும்புக் கதவுமாக விளங்கினுர்கள். இத்தகைய புதல்வர், புதல்விகளோடு அளவளாவி மகிழ்ச்சிப் பெருக்கில் மிதந்து பூரித்தார்கள்.

இதற்கும் அடுத்த படியில் ஏறினுர்கள்.

சுற்று முற்றும் தழைத்துச் செழித்துக் கிளைத்த சுற்றத்தார்கள். இந்தச் செழுங்கிளைகளை இவர்கள்

தாங்கி நின்றார்கள். இவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி இந்த சுற்றத்தார் அறவழியில் சென்றும், இவர்களைப் புடை சூழ நின்றும், வாழ்வில் வெற்றி கண்டு இறும்பூதெய்தினார்கள்.

இதற்கும் அடுத்த இறுதித் திட்டப்படியில் ஏறினார்கள்.

தலைவனும் தலைவியாகவும் வாழ்ந்தார்கள். ஆனால் இல்லறத் துறையில் ''ஆரஞ்சுப் பழத்தின் கடைசித் துளிச்சாற்றையும்·பருகி சுவைத்து அருந்தி விட்டார்கள். புளியம் பழமும் தோலும் போன்ற பக்குவ உள்ளம் அடைந்தார்கள். மக்களும் சுற்றமும் சூழ்தர வாழ்ந்தார்கள். ஆனால் அவர்களின் ஆசாபாசத்தில் கட்டுண்டு கிடக்கவில்லை. அவர்களுடைய காதலன்பு, மக்களன்பு, உற்றார் உறவினர் அன்பு, ஊரார், நாட்டார், உலகத்தார் என்று பரந்து விரிந்த சமுதாய அன்பாக மலர்ந்தது; மணம் வீசிற்று.

மனித வர்க்கத்தை—ஜீவகோடிகளை அருளற உணர்ச்சியால் ஆரத்தழுவி, சீரிய ஊழியத்தின் திருவுருவங்களாகக் காட்சியளித்தார்கள்.

சென்ற கால அனுபவத்தின் விளைவாக, ''எம் கடன் உலகுக்குப் பணிசெய்து நிற்பதே'' என வாழ்ந்தார்கள்.

இந்த சாகாவரம் பெற்ற உயர் லட்சியக் குடும்ப வாழ்க்கை உலகு தழுவிய தலைவன்—தலைவியரை—கண்ட காட்சி வல்லான். சான்றோரிற் சான்றோர் யார்? ஓங்காப் பெரும் புகழ்த் **தொல்காப்பியன்.**

அவன் தீட்டிக் காட்டியுள்ள அமர சித்திரம் எங்கே? இதோ:

**''காமம் சான்ற கடைக்கோட் காலை**
**ஏமம் சான்ற மக்களொடு—துவன்றி**

அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே''

—தொல்காப்பியம்—பொருளதிகாரம்—கற்பியல்-192.

[**இதன் பொருள்**: *நிறைந்த இல்லற இன்பத்தின் முடிவைக் கண்டதும், அரண்போல் நின்று பேணிக் காக்கும் புதல்வர் புதல்விகளைப் பெற்றதும், அறநெறி வழுவாத உற்றார் உறவினரைக் கொண்டதும், அவர்கள் புடை சூழ நின்றதும் ஆகிய தாம் அனுபவித்து விட்ட குடும்ப வாழ்க்கையின் பயனால்தான் தலைவனும் தலைவியும் சிறந்த உலகப் பணியில் ஈடுபடுகிறார்கள்.*]

## சமுதாயக் காட்சி-2

படம் பிடித்தவர்:

# பிசிராந்தையார் கண்டது

அன்று ஒரு பெரியார் வந்தார். அவர் கபிலர், பரணர் வரிசையைச் சார்ந்த, சங்ககாலச் சான்றோர் களில் சான்றோர்.

கசடறக் கற்றவர்; கற்றபடி நின்றவர். ஒளி படைத்தக் கண்ணும், தெளிவு பெற்ற மதியும், விநயம் நின்ற நாவும், முழுமைசேர் முகமும் படைத்தவர்.

நீண்ட நெடுங்காலம் உலக வாழ்வை நுகர்ந் தவர். ஆயினும் நரை, திரை, மூப்பு அவரிடம் நெருங்க அஞ்சிக் கிடந்தன.

அவர் ஒரு மாநாட்டில் நுழைந்தார். அங்கு பல சான்றோர்கள் குழுமியிருந்தார்கள்.

நடமாடும் சான்ருண்மையின் ஆற்றலைக் கண்டதும் பணிவன்புடன் யாவரும் ஒரு சேர எழுந்து நின்று, கைகூப்பி வரவேற்று அமரச் செய் தார்கள். எதிர்பாராது கிட்டிய வாய்ப்பில் மகிழ்ச்சி பூத்தார்கள். நமது சான்றேருடன் அளவளாவிக் கொண்டிருந்தார்கள்.

## புதுமைக்குக் காரணம்!

அஞ்ஞான்று சிலர் ''சான்றீர்'' யாங்கள் உங்களை நெடுங்காலமாகக் கேள்விப்பட்டிருக்கிறோம். யாங்கள் சின்னஞ் சிறுவராயிருந்த காலத்தே உங்கள் புகழ் எம் செவிகளில் விழுந்ததுண்டு. அவ்வாறாயின் உங்களுக்கு ஆண்டு பலவாகி இருக்க வேண்டுமே. அப்படியாயின் உங்கட்கு நரைதிரை ஏற்பட்டிருக்க வேண்டுமே. அவை சிறிதும் உங்களிடம் காணப்படவில்லையே. இந்தப் புதுமைக்குக் காரணம் யாது என்று ஆவல் துடிக்க வினவினார்கள்.

நமது பெரியாரிற் பெரியாரான சான்றோர் தமது நீடித்த வாழ்நாளில் நுண்ணிய பல அனுபவங்களை தெள்ளிதில் கண்டார். தமிழ் இலக்கியங்களை எழுத்தெண்ணக் கற்றவர். தமிழ்ப் பண்பாட்டில் ஊறித் திளைத்தவர். தமிழர் கண்ட உண்மைகளையும், இதரர் கண்ட உண்மைகளையும், சுருங்கச் சொன்னால் அக்காலம் கண்ட உண்மைகளைத் துணிந்து அறிந்து அமைந்தவர்.

வாழ்வின் இளமைக்கும் முதுமைக்கும் ஆணிவேர் எது என்பதை தெள்ளத்தெளிய அறிந்தவர்.

பொதுவாக மக்களுக்கு ஆண்டுகள் பல ஆக ஆக நரையும் திரையும் வந்து தழுவுகின்றன. என்றும் இளமையாயிருக்க எல்லோரும் விரும்புகிறார்கள். முதிய வயதில் நரை திரை இல்லாது காட்சியளிப்பவரைக் காண்பதுதான் அரிது.

## இயல்பான வழி

அழகும் இளமையும் அடைய அவா மிக்கு, சிலர் தப்பும் தவறுமான வழிகளில் வீண் முயற்சி செய்து ''உள்ளதும் போச்சு நொள்ளைக் கண்ணா'' என்றாகி விடுகிறார்கள். காயகற்பம் தேடுகிறார்கள். சிங்கக் குட்டியை வென்ற சிட்டுக்குருவி இலேகி

யத்தை விழுங்குகிருர்கள். 'குளிக்கப்போய் சேற்றைப் பூசிக்கொள்வது போல' இளமைக்கு முயன்று முதுமையை வரவழைத்துக் கொள்கிருர்கள். அகால நரை திரைகளை இன்று நாம் பரக்கக் காண முடியும்.

நமது நல்லிசைச் சான்ருேர் நரை திரையை வென்றவர் அல்லவா? ஆகவே, நரை திரைகளை விலக்க அவர் காட்டும் வழி இயல்பானது–நிலை யானது; என்றும் எங்கும் வெற்றி சூடுவது. நெடு நாள் திரையின்றி வாழவேண்டுமென்று கனவிலும் விரும்பியறியாதவர்களைக் கூட அந் நிலையில் இருத்து வது. எனவே அவர் கண்டதும், காட்டப்போவது மான வழிதான் சாலச் சிறந்த விஞ்ஞான வழி.

## பெரியார் பதில்

நரை திரைக்கு ஆதாரம் கவலை. கவலைக்கு அடிவாரம் சமுதாயச் சூழ்நிலை. குறிப்பிட்ட சமுதாயச் சூழ்நிலை உருவாகி விட்டால், மனிதன் நரை திரை நீங்கி இளமையோடு வாழ முடியும். புராணம், 'சுவர்க்கத்தில்' நரை, திரை, பிணி, மூப்புக் கிடையாதென்று கற்பனைக் கதை சொல்லு கிறது. 'கவலை துறந்திங்கு வாழ்வதே வீடு' என்று 'மோட்சத்திற்கு' விளக்கம் தருகிருன் பாரதி.

நரை திரையிலாமைக்குக் காரணம் கேட்ட சான்ருேர்களுக்கு நமது பெரியார் பதிலிறுத்தார்:

''என் வாழ்வைக் கவலை துளிகூடத் தொட்டதில்லை''

''எதனுல்?''

''என் வாழ்வோடு, எனது மனைவி, மக்கள், இளையர், அரசன், என் போன்ற சான்ருேர் வாழ்வும் குறிப்பிட்ட வண்ணம் இணைந்து, ஒரு சமூகச்

சூழ்நிலை எனது சமுதாயச் சூழ்நிலையாக ஒளிவீசிக் கிடக்கிறது. அதனல்,

"அதனல் கவலை ஒழிவதெப்படி?"

"நான் அருள் பழுத்த, இனிமையும் பெருமையும் வாய்ந்த புனித வாழ்வு வாழ்கிறேன். என் வாழ்க்கைத் துணைவி 'செறிவும் நிறைவும்', 'செம்மையும் செப்பமும்', 'அறிவும் அருமையும்' மிக்கவள். எனது மக்கள் பெற்ரோர்க்கு இன்பம் பயக்கவல்ல அறிவு மிக்கவர்கள். என்னினும் இளையவர்களும் ஏவலர்களும் என் போலும் கண்ணேட்டம் படைத்தவர்கள். என் குறிப் பறிந்து நடப்பவர்கள். என் நாட்டு அரசன் முறையில்லாதன செய்யான். மக்கள் அல்லற்பட்டு ஆற்ருது அழ, ஒருக்காலும் இடம் கொடான். குடிகளை, 'வறிஞன் ஓம்பும், ஓர்சேய் எனக் காத்து' இனிது அரசு செய்கிருன். மேலும் எனது ஊரில் சான்ருேராய் விளங்குபவர் பலர். அவர்கள் அறிவு பழுத்து 'அமரருள் உய்க்கும்' அடக்கத்துடன் அருள்படிந்த வாழ்வில் திளைப்பவர்கள்.

இப்படி, எவ்விடத்தும், யாரிடத்தும் இணக்கமான வாழ்வு கொழிக்குமாதலால் கவலை திவலையும் கசிய வழியில்லை. மக்கள் நீண்ட நெடுங்காலம் நோயற்ற வாழ்வும், குறைவற்ற செல்வமும் எய்தி இளமை இன்பத்தை உளமார உயிரார நுகர முடியும். பல்லாண்டு நரை திரை அணுகாது வாழ முடியும்."

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் தமிழகத்தில் எழுந்த தமிழறிவின் முதிர்ந்த சிறந்த கருத்து இது.

புதிய உலகில் முன்னேறும் தமிழக மக்களுக்கு, ஒளி காட்டி வழிகாட்டும் அந்தப் பெருஞ்சான்ருேர் யார்? அவர் பாடிய பாடல் எது?

அவர்தான் சங்ககாலப் பெருஞ்சான்றோரான **பிசிராந்தையார்.** அவர் பாடிய பாடல் பின் வருமாறு:

''யாண்டு பலவாக
நரையில ருகுதல்
யாங்காகியிர்? என
வினவுதிர் ஆயின்
மாண்ட என் மனைவியொடு
மக்களும் நிரம் பினர்;
யான் கண்டனையர் என்
இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான்;
காக்கும்; அதன் தலை
ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான்
வாழும் ஊரே.''

—புறநானூறு- 91.

[**இதன் பொருள்:** ஆண்டு பல ஆகி முதுமையடைந்த பிறகும், நரை திரையின்றிக் காணப்படுகிறீரே, இதற்கு என்ன காரணம் என்றுகேட்க, எனது வாழ்க்கை மேம்பட்ட வாழ்க்கை. எனது மனைவியும் மக்களும் குணத்திலும் அறிவிலும் மிக்கவர்கள். எனது பின் தோன்றல்களும் ஏவலாளரும் எனது கருத்துக்கு இணக்கமான கருத்தும் நடப்பும் உடையவர்கள். எங்கள் அரசன் நீதிக்குப் புறம்பாக எதையும் செய்ய மாட்டான். கண்ணை இமை காப்பதுபோல் மக்களைக் காப்பான். எனது ஊர் சான்றோர் கள் நிறைந்த ஊர். அறிவுச் செறிவும் புலனடக்கமும் அருள் வாழ்வும் வாய்க்கப் பெற்றவர்கள் அவர்கள். ஆகவே நரை திரை தோன்ற வில்லை—என்று கூறினர்.

## சமுதாயக் காட்சி-3

படம் பிடித்தவர்:

# இளம்பெருவழுதி

**கோடி**, கோடி கோடானு கோடி மக்கள் உலகில் வாழ்கிருர்கள். தரத்திற்கும் தன்மைக்கும் தக்கபடி ஒவ்வொருவருக்கும் ஓர் ஐயப்பாடு முளைக்கிறது.

சங்ககாலத் தமிழகத்தில் ஓர் அரசன். அவன் புவியரசன் மட்டுமல்ல, கவியரசனும்கூட. அவன் பண்டைய கிரேக்க நாட்டுத் தத்துவஞான மன்னன் (Philosopher king) மாதிரி—இதிகாசக் கதையில் ''மிதிலை எரிந்திட வேதப்பொருளை வினவும் சனகன்'' போன்ற ராஜரிஷி. இந்தப் புவியரசக் கவியரசனுக்கு ஒரு விசித்திரமான ஐயப்பாடு முளைக்கிறது.

''உலகம் இருக்கிறதா? இல்லையா'' என்பது தான் அந்த ஐயப்பாடு.

இது, சான்ருண்மை சான்ற அப்பெரியாரின் வாழ்வில் ''இரு நிலம்பிளக்க வேர் வீழ்ந்த'' ஐயப்பாடு. நீண்ட நெடிய காலமாக அவர் வாழ்வை அடிமுதல் முடிவரை குலுக்கி எடுத்த ஐயப்பாடு. இந்த ஐயப்பாடு அல்லும் பகலும் அனவரதமும் விநாடிக்கு விநாடி அவர் உள்ளத்தைக் குடைந்து கொண்டே இருக்கிறது.

ஆய்கிறார்; ஆய்கிறார்; ஐயம் நீங்கு படலம் காண வாழ்வில் சிந்தனையில் நூல்களில் தோய்ந்து தோய்ந்து ஆய்கிறார்.

இறுதியில் போதிமர நிழலில் புத்தர் பெருமானுக்குப் புத்தொளி கிட்டியதுபோல் புத்தொளி பெறுகிறார். ''உலகம் உண்டு'' என்ற தெள்ளிய முடிவுக்கு வருகிறார். குறிப்பிட்ட சில தன்மை வாய்க்கப் பெற்ற மனிதர்கள் வாழ்வதால் மனித உலகம் என்று சொல்லற்கரிய ஓர் உலகம் இருக்கிறது என்று தெளிகிறார்.

மனிதப் பண்புகளில் மிகச் சிறந்த பண்புகளை—சான்றாண்மையின் சாலச் சிறந்த கூறுகளை—ஒவ்வொன்றாகக் கண்டு தெளிகிறார். நடமாடும் இப் பண்புகளாலேயே மெய்யான மனித உலகம் காட்சியளிக்கிறது என்று முடிவு கட்டுகிறார்.

எங்கணும் யார்க்கும் எத்துணை முயற்சி செய்யினும் பெறவொண்ணாத அரும் பெறல் பேறாகிய இந்திரர் அமிழ்தம் ஒருவருக்குக் கிடைப்பதை நமது கவிப்புவி அரசர் காண்கிறார்.

''இஃது அடிக்கடி கிடைக்க முடியாத அரும் பொருளாயிற்றே, நாமே உண்போம்; மிஞ்சினால் நமது நெருங்கின உறவினர்க்கு மட்டும் கிஞ்சிற்று கொடுப்போம்'' என்று அமிழ்தம் பெற்றவர் நினைக்கவில்லை.

''காகம் உறவு கலந்துண்பதுபோல்'' தாமும் மற்றவர்களோடு கலந்து உண்கிறார். இதனைக் காண்கிற நமது சான்றோர் ''எப்பொருள் கிட்டினும் தனித்திருந்து உண்ணாதவர்கள் விரல்விட்டு எண்ணத் தக்கவரேனும் உலகில் இருக்கிறார்கள். ஆகவே அவரால் மனித உலகம் இருக்கிறது என்று சொல்லத் தக்கதாயிருக்கிறது'' என்று பெருமிதத்தோடு கூறுகிறார்.

## உலகம் இருக்கிறது

நுண்ணிய பெரும் ஆராய்ச்சிக்குப் பின் யார் மீதும் வெறுப்புக் கொள்ளாத ஓரிருவர் நமது சான்ருேர் கண்ணில் தென்படுகிருர்கள். ''அன்பே உயிர் நிலே'' என்று வாழ வேண்டும். ''எத்துணேயும் பேத முறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உள்ளே ஒத்துரிமையுடையவராய் உவக்க வேண்டும்.'' அத்தகைய அன்பரசரே எவரையும் வெருர். அத்தகைய ஓரிருவரை நமது சான்ருேர் சந்தித்து ''காகம் உறவு கலந்துண்பதுபோல்'' தாமும் மற்ற வர்களோடு சமமாயிருந்து கலந்துண்கிருர்.

''அமிழ்தத்தையும் 'தனித்திருந்து' உண்ணுது 'பகுத்துண்டு' வாழ்கிறவர்கள் உலகில் இருக்கிருர் கள். எனவே, உலகம் இருக்கிறது'' என்று பெரு மிதத்தோடு கூறுகிருர்.

''அன்பின் வழியது உயிர்நிலே'' என்று வாழ் கிறவரே எவரிடமும் மனக்கசப்பு அடைய மாட் டார். எத்துணேயும் பேதமுருது எவ்வுயிரும் தம் முயிர்போல் எண்ணி, உள்ளே ஒத்துரிமையுடைய வராய் உவப்படைக்கிறவரே எவரையும் வெறுக்க மாட்டார். இத்தகைய வெறுப்பும் கசப்புமற்ற அரு ளொழுக்கமுடையார் ஓரிருவரை நமது பெரியார் பார்க்கிருர். உடனே, இவர்கள் வாழ்வதால் மனித உலகம் இருக்கிறதென்று தீர்மானிக்கிருர்.

## அபூர்வ மனிதர்

புத்தம் புது நற்செயல்களில் ஈடுபட்டு, எதிர் நோக்கும் இடி மின்னல்களேயும், புயற்காற்றுச் சூறைகளேயும், பயங்கர உற்பாதங்களேயும் கண்டு மற்றவர் அஞ்சி நடுநடுங்கும்பொழுது தான் நடுங்காது மனம் ஒடியாது நிற்கும் மாவீரன் அபூர் வம். இத்தகைய அபூர்வ மனிதர் சிலரை நமது சான்

றோர் தமது வாழ்வில் நேருக்கு நேர் சந்திக்கிறார். இந்தச் சந்திப்பின் விளைவாக "உலகம் இருக்கிறது" என்று முடிவுக்கு வருகிறார்.

'புகழ்' என்றதும் உயிரைக் கொடுக்கிறவர்களையும், பழியோடு உலகத்தையும் சேர்த்துக் கொடுக்க "பழியும் வேண்டாம் உலகமும் வேண்டாம்" என்று உறுதி காட்டுகின்றவர்களையும் நமது சான்றோர் காண்கிறார்.

"இவர்கள் வாழ்கிற உலகம்தான் உலகம். எனவே உலகம் இருக்கிறது" என்று தெளிவு பெறுகிறார்.

கவலையின் மாசுமறுகூடத் தீண்டாத வாழ்வு வாழ்கிற பிசிராந்தையார் போன்ற சான்றோர்களைக் காண்கிறார். "உலகம் இருக்கிறதா இல்லையா?" என்ற ஐயப்பாடு பரிதிமுன் பனிபோல் மறைகிறது. "உலகம் இருக்கிறது" என்று "ஆம்" என ஒப்புக் கொள்கிறார்.

மேற்கூறிய அத்தனை பண்புகளின் சிறப்புக்களுடன் தனக்கென வாழாமல் பிறர்க்காகவே—உலக மக்களுக்காகவே வாழுகிறவர்கள் இருப்பதால், மனித உலகம் இருக்கிறது என்று சொல்லத் தக்கதாயிருக்கிறது என்று ஐயம் திரிபுஅற முழங்குகிறார்.

இவ்வாறு பொருள் கமழப் பாடிய சான்றோர் யார்? அன்னார் பாடிய பாடல் எது?

பாடிய சான்றோர் பாண்டிய மன்னனாகிய **இளம்பெருவழுதி** என்பவர். அவர் பாடிய இணையற்ற பாடல் இது:

> "உண்டா லம்ம விவ் வுலகம் மிந்திரர்
> அமிழ்த மியைவதாயினும், மினிதெனத்
> தமிய ருண்டலும் இவரே; முனிவிலர்;

துஞ்சலு மிவர், பிற ரஞ்சுவதஞ்சி;
புகழெனி, னுயிருங் கொடுக்குவர்;
பழியெனின்,
உலகு டன் பெறினுங் கொள்ளால
ரயர்விலர்;
அன்னமாட்சி யனையராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மையானே.''

—புறநானூறு-182).

[**இதன் பொருள்**: உண்டு இந்த உலகம். ஏனென்றால் இந்திரர் உண்ணும் அமிழ்தமே இங்கு கிடைப்பதாயிருந்தாலும் இனியதே என்று கிடைத்து விட்டதென்று கருதி, அதனைத் தனித்திருந்து உண்பவர்கள் இங்கே இல்லை. யாரிடமும் எதனிடமும் வெறுப்படைகிறவர்களும் இங்கே இல்லை. பிறர் அஞ்சும் இடர்களுக்குத் தாமும் அஞ்சி வேண்டுவன செய்யாமல் மனம் மறிந்து இருப்பவர்களும் இல்லை. புகழ் தரும் செயல் என்றால் உயிரை உவப்புடன் கொடுக்கிறவர்கள் இருக்கிறார்கள். பழிதரும் பணியென்றால் அதனால் உலகம் முழுவதுமே பெறுவதாயிருந்தாலும் மேற்கொள்ளாதவர்கள் இருக்கிறார்கள். கவலையும் தளர்ச்சியும் அடையாதவர்கள் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட மாட்சிகளெல்லாம் உடையவராகி தமக்கென்று வாழாது, வலிய பெரிய முயற்சியுடையவர்களாய் பிறர்க்கென முயலுகிறவர்கள் இருத்தலால்.]

## சமுதாயக் காட்சி—4

படம் பிடித்தவர்:

### நக்கீரர்

நமது பெரியார், ''திருமுருகாற்றுப்படை'' கூறுவதுபோல் ''கற்றோர்க்குத் தாம்வரம்பாகிய தலைமையார்'', ''துணியில் காட்சி முனிவர்.''

நமது சான்றோரின் தந்தையார் சிறந்த கணக்காயனார். இவரும் நல்லிசைப் பெரும்புலவர். இவர் ''தந்தையார் ஒப்பார் மக்கள் என்பதனால்'' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்கு இலக்கியம்.

இவர், மூவேந்தர்களும் சீராட்டிப் பாராட்ட வாழ்ந்தவர். தமிழகம் முழுவதும் நன்கறிந்தவர். சங்ககாலத் தலைமைப் புலவர்.

இத்தகைய சீரிய சான்றோர், மக்கள் வாழ்வை ஆய்கிறார். பல்வேறு வகைப்பட்ட பல வேறு மக்களின் வாழ்வை ஆராய்கிறார். காடும், மலையும், நாடும், கடலுமாகிய எல்லாப் பகுதிகளிலும் வாழும் மக்களின் வாழ்வை ஆய்கிறார். பலப்பல மக்களின் பற்பல முயற்சிகளையும் முற்ற முற்றத் தமது புலமைக் கண்ணால் துருவித் துருவி நோக்குகிறார்.

பொதுப் படையாக எல்லோரிடமும் பொருள் ஈட்டும் நோக்கும் போக்குமே முனைந்து நிற்பதைப் பார்க்கிறார். பல்வகை உண்மைகளைப் பிழிந்தெடுக்கிறார்.

ஆயினும், இவர் கண்ணிலும், கருத்திலும் நின்று அகலாத காட்சிகள் இரண்டு. அவற்றை நமக்கு ''டார்ச்'' வெளிச்சம் போட்டுக் காட்டுகிருர்.

ஒரு அரசன் பேரரசன். உலக முழுவதையும் தன் குடை நிழலில் அடக்கி நிற்கிருன். ஆயினும் அவனிடம் செங்கோலுக்குரிய செயற்பண்பு இல்லை. பொதுமை உணர்வு இல்லை. தான் வாழ வித் தெடுக்கிருன்.

இது ஒரு காட்சி.

ஒரு வேட்டுவன். காடு வாழ் விலங்குகளை வேட்டையாடித் திரிகிருன். பல நாட்கள் இரவும் தூங்காமல் பகலும் தூங்காமல் கண்கொட்டாமல் காலமெல்லாம் தன் விருப்பத்திற்கேற்ப விலங்கு களைப் பிடிப்பதையே தன் முழு முயற்சியாகக் கொண்டு திரிகிருன்.

இது மற்ருெரு காட்சி.

இவ்விரு காட்சிகளும் நமது சான்ருேரின் மனக் கண்முன் மாறி மாறிப் படமாடுகின்றன. சிந்தனை யைக் கிளறி விடுகின்றன.

இவர்கள் அல்லும் பகலும் கண்மலராது, பெரு முயற்சியில் திளைக்கிருர்களே, இம் முயற்சியின் முடிவுதான் என்ன? என்று தன்னுள்ளேயே கேள்வி போடுகிருர். பதிலும் பெறுகிருர்.

அரசனுக்கும் ஆண்டிக்கும் அடிப்படைத் தேவைகள் ஒரே வகைத்தான சிலவே என்ற முடிவுக்கு வருகிருர். இவர் அனைவர்க்கும் வேண்டுவன உண்டியும் உடையுமே என்றும் பிற வகையில் ஒரு வேற்றுமையும் இல்லையென்றும் துணிகிருர்.

பெரிது ஈட்டித் தனித்து உண்பவர் செல்வர் என்கிருர். சிறிது ஈட்டிப் பலர்சூழ உண்பவர் வறியர்

என்கிறார். உழைப்பு இல்லை குவிப்பு அதிகம்; உழைப்பு அதிகம் குறைவு ஊதியம். இந்தச் சூழ்நிலை உடையவர்க்கும் எளியவர்க்கும் இடையில் வேற்றுமையை அதன் வழிப் பகைமையை அதன் வழி மோதலைப் பிறப்பிக்கிறது. இதனால் எல்லோருடைய வாழ்வும் வலுவற்று அறனும் இன்பமும் குன்றிச் சீரழிவது ஒருதலை என்று பார்க்கிறார்.

ஆகவே, செல்வர்களின் கடமை ஈதல் என்று வற்புறுத்துகிறார். ஈதல் இயற்றாது தாமே துய்ப்பின் அறமும் பொருளும் இன்பமும் சிதைந்து சமுதாயம் சீரழியும் என்று எச்சரிக்கை செய்கிறார்.

இத்தகைய தெள்ளிய அறிவுரை நல்கிய புலவர் யார்? அவர் பாடிய அமுதனைய பாடல் எது? அப்புலவர் பெருமான் மதுரை கணக்காயனார் மகனார் **நக்கீரனார்**. அவர் அருளிய பாடல் இதோ:

தெண் கடல் வளாகம்
பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய
ஒருமை யோர்க்கும்
ஒருநாள் யாமத்தும்
பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும்
கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி
உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம்
ஓரொக் கும்மே
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்போம் எனினே
தப்புந பலவே —புறநானூறு-189.

[**இதன் பொருள்:** தெளிந்த நீரால் சூழப்பட்ட உலக முழுவதையும் பிற அரசர்களுக்குப் பொதுவாத

லன்றி தனக்கே உரியதாக ஒரு குடை நிழலில் அரசாள்கின்ற பேரரசனுக்கும், நள்ளிரவிலும் நண்பகலிலும் தூங்காமல் கொடிய விலங்கு களை வேட்டையாடித் திரியும் வேடன் ஒரு வனுக்கும், உண்ணத் தேவைப்படும் பொருள் நாழி, உடுக்க தேவைப்படும் துணி இரண்டு. பிற தேவைகளும் ஒரு மாதிரித்தான். ஆகவே செல்வத்தால் பெறும்பயன் கொடுத்தல் ஒன்றே. செல்வத்தை நாமே அனுபவிப்போம் என்று கருதுதல் பல தவறுகளை விளைவிக்கும்.]

## சமுதாயக் காட்சி-5

படம் பிடித்தவர்:

## சோழன் நல்லுருத்திரன்

ஓர் அரசன் சான்றோர் வரிசையில் முதல் வரிசையில் வைத்து எண்ணத்தக்க அரசன். இவன் உயர்ந்த உள்ளமும், பரந்த கல்வியும், சிறந்த வினைத் திட்பமும் உடையவன்.

கவி அரசனான இவன் புவி அரசனாகவும் சிறந்து விளங்கியதால், குறுநில மன்னர்களும் பெருநில கிழார்களும் இவனைப் பலாப்பழமென மொய்த்துக் கிடந்தார்கள். அவர்கள் துணையால் இவனும் பொருளும், புகழும் மிக்கு வாழ்ந்தான்.

இவன் அனுபவக் களஞ்சியமாய்த் திகழ்ந்தான். தன்னைப் புடைச் சூழ்ந்து நின்ற மன்னரையும் செல்வரையும் (அவர் தம் குணநலன்களையும்) அலசி அறியும் வாய்ப்பு அவனுக்கு நிறையக் கிடைத்தது.

ஆக்கம் தந்தவர்களையும் அறிவான், கேடு சூழ்ந்தவர்களையும் அறிவான். இரு திறத்தாரின் குணநலன்களையும் தெள்ளத் தெளிய அறிவான்.

எனவே, அவன் வாழ்வில் ஏற்படும் நட்பை இரண்டாக வகைப்படுத்துகிறான். ஒன்றைத் தள்ளத்தகும் நட்பு என்கிறான். மற்றொன்றை கொள்ளத்தகும் நட்பு என்கிறான்.

தள்ளத்தக்க நட்பை எலி வாழ்வுடையோர் நட்பு என்றும், கொள்ளத்தக்க நட்பை புலிவாழ் வுடையோர் நட்பென்றும் குறிப்பிடுகிறான்.

அவன் நுட்ப திட்பமாக அலசி ஆராய்ந்த எலி வாழ்வு, புலி வாழ்வுகளை அருமையாக படம் பிடித்துக் காட்டி மேற்படி நட்பின் இருவகைகளை யும் விளக்குகிறான்:

எலி வாழ்வு பின்வருமாறு:

வயலில் நெல் விளைந்து முற்றிக் கிடக்கிறது. அங்கே வளையில் ஒரு எலி வாழ்கிறது. அந்த வயல் சிறியவயல். பதத்தோடு விளைந்து கிடக்கிற அந்த வயலை வளைவாயிலில் இருந்து கொண்டு எலி பார்க்கிறது. எலிக்கு மேலே ஏற வேண்டிய முயற்சி இம்மிகூட இல்லை. வளையின் அருகிலேயே கதிர்கள் விளைந்து வளைந்து சாய்ந்து தரையோடு தரையாய் விழுந்து கிடக்கின்றன. இந்தக் காட்சியைக் கண்ட எலிக்கு சேமிப்பு உணர்ச்சி ஏற்படுகிறது. உடனே அந்த எலி விளைந்துகிடக்கும் தனது உணவாகிய அந்தக் கதிர்களை கதிர் கதிராக கடித்துக் கொண்டு போய் தனது வளை நிறைய வைத்துக் கொள்கிறது.

இனி, புலி வாழ்வு பின்வருமாறு:

காட்டில் ஒரு புலி தன் வழியே போய்க் கொண் டிருக்கிறது. இது விரைவாய் வேகமாய்ப் போன போக்கில் ஒரு பன்றிமீது மோதி அந்தப் பன்றி கீழே விழுகிறது. அந்தப் பன்றியும் பயங்கரமானது தான். அதிலும் ஆண் பன்றிதான். எனினும் புலியைவிடத் தரங்குறைந்த பன்றிதானே! மேலும் அது புலிக்கு வலப்பக்கமாக விழவில்லை. இடப் பக்க மாக விழுகிறது. அதோடு அந்தப் புலி அந்தப் பன்றியோடு வீரம் வெளிப்படப் போராடி அதனை மாய்க்கவில்லை. தற்செயலாகத்தான் அந்தப் பன்றி வீழ்ந்து மடிகிறது.

ஆகவே புலிக்கு பசியிருந்தும் அப்போது அங்கே அந்தப்பன்றியைக் கிழித்துத் தின்னவில்லை. அப்படித் தின்பது புலிக்குத் தரக் குறைவாகப் படுகிறது. எனவே பசியோடு குகைக்கு மீண்டுவிடுகிறது.

மறுநாள் மலை கிடுகிடாய்க்கும்படி புலி குரல் எழுப்புகிறது. தனது குகையிடம் தனிமையாகும்படி அங்கிருந்து புறப்படுகிறது. அன்று உணவு தேடு வதையே ஒரு நோக்காகக் கொண்டு புறப்படுகிறது. உணவு நாடி எழுச்சியோடு அந்தப் பெரிய மலைப் பிளவுகளில் பாய்கிறது. பாய்ந்து, அந்தப் புலி ஒரு பெரிய ஆண்யானையைத் தாக்குகிறது. தனது வலிமை மிகுந்த வலப்பக்கத்தில் விழுந்து இறக்கும் படி அதை வீழ்த்துகிறது. அதன்பின், அந்தப் புலி தனது ஆண்மை கிளர்ச்சி எழுச்சிபெற அந்த யானையைக் கிழித்துப் பெருமிதத்தோடு நின்று பசி ஆறியது.

இந்த இரண்டு வாழ்க்கைப் படங்களையும் காட்டிவிட்டு கவியரசன் மேற்கூறிய நட்புறவைப் பற்றிக் கூறுகிறான்.

மக்களிலும் பலர் எலி முயற்சிபோல் சிறு முயற்சியுடையவர் உடைமையாவது, யாரேனும்நன் கொடையளிக்கும் உடைமையாவது, எந்த வழியி லேனும் வந்தடையும் உடைமையாவது கள்ளங் கபடு, சூதுவாது, கடுவட்டி முதலிய தரம்கெட்ட குணங்களால் திரளும் உடைமையாவது எப்படி யேனும் கிடைக்குமா என்று ஏங்கிக் கிடக்கும் ஆண்மையற்ற அலிகள் இருக்கிறார்கள். இவர் களோடு நட்புறவு மறந்தும் கொள்ளக்கூடாது என்கிறான் கவி அரசன்.

மக்களில் சிலர் புலி முயற்சிபோல், பெரு முயற்சி உடையவர்களாயிருக்கிறார்கள். புலி பசித் தாற் போன்ற மெலிவில்லாத நினைவும், தாம் தாழாத முயற்சியும், சாதனையில் பெருமிதமும்

கொள்கிற சான்றோர்கள் இருக்கிறார்கள். இவர்களின் நட்புறவே சிறந்த நட்புறவு. இத்தகைய நட்புறவோடு பொருந்திய நாட்களே வாழ்வில் இருக்க வேண்டும் என்கிறான் கவி அரசன்.

மனித வாழ்வின் பெரும் போக்கையும் பெரு நோக்கையும் படம் பிடித்துத்தந்த இந்தச் சான்றோன் யார்? இவன் பாடல் எது? இந்தச் சான்றோன் **சோழன் நல்லுருத்திரன்**. இவன் பாடல் இதோ!

விளைபதச் சிறிடம் நோக்கி விளைகதிர்
வல்கி கொண்டு அளைமல்க வைக்கும்
எலி முயன்றனைய ராகி உள்ளதம்
வளன் வலியுறுக்கும் உளமிலாள ரொடு
இயைந்த கேண்மை இல்லாகியரோ!
கடுங்கண் கேழல் இடப்பட வீழ்ந்தென
அன்று அவண் உண்ணு தாகிவழிநாள்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுத்து
கருங்களிற்று ஒருத்தல் நல்வளம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
உரனுடையாளர் கேண்மையோடு
இயைந்தவைகல் உளவாகியரோ.

—புறநானூறு-190.

[**இதன் பொருள்:** விளைந்து முற்றிக் கிடக்கிற வயலிடத்தைக் கண்டு, விளைந்து கிடக்கிற கதிராகிய உணவைக் கடித்துக் கொண்டுபோய் வளை நிறைய வைக்கிறது: எலி முயற்சியைப் போல் சிறிய முயற்சியுடையவராகி தம்மிடமுள்ள செல்வத்தை அனுபவிக்காது இறுகப் பிடித்து தொகுத்து வைத்திருக்கும் முயற்சிச் சிறப்பு இல்லாதவரோடு நட்புறவு கூடாது. ஒரு புலி பயங்கரமான ஆண் பன்றி தனது இட பக்கத்தே பட்டு வீழ்ந்தபோதும் அன்று அங்கு அதை உண்ணாமல் மறுநாள்

தனது குகையை விட்டு எழுந்து மலையினுள் சென்று பெரிய யானை ஒன்றைத் தனது வலது புறத்தே விழுந்து இறக்கும்படித் தாக்கி வீழ்த்துகிறது. இப்படிப் புலி பசித்தாற்போன்ற குறைவில்லாத மன வலிமையுடைவர்களோடு வாழ்க்கையில் நட்புறவு கொள்ளும் நாட்களே சிறந்த நாட்கள்.]

## சமுதாயக் காட்சி-6

படம் பிடித்தவர்:

## கோபெருஞ்சோழன்

இவன் புவி அரசன்; அதே பொழுதில் கவி அரசன். உலக அனுபவத்தைப் பொறுத்த மட்டில் பழம் தின்று கொட்டை போட்டவன்.

தன்னை சுற்றிச் சூழ்ந்துள்ள மக்கள், எந்த ஒரு செயலில் ஈடுபடுவதானாலும் கைமேல் பலன் கிடைக்குமா என்று எதிர்பார்ப்பதைக் காண்கிறான். 'வெற்றி செயலுக்கு உண்டு' என்ற அனுபவ உண்மையில் அவர்கள் துளிகூட நம்பிக்கையின்றிச் சோம்பிக் கிடப்பதைப் பார்க்கிறான்.

படியாதவர்களை மட்டுமல்ல இவ்வாறு பார்க்கிறான். படித்தவர்களிலும் பலரை இவ்வாறு பார்க்கிறான்.

'கருமமே கட்டளைக் கல்' என்பதை அவர்கள் காண முடியவில்லை. வாழ்வின் இந்த உட்சாரத்தைக் காணமுடியாது, அவர்கள் மயங்கிக் குழம்பிச் செயலற்றுக் கிடப்பதைப் பார்க்கிறான். இதன் விளைவாக அவர்களுடைய வாழ்நாள் பிடிப்பும், சுவையுமற்று அவல நிலை அடைந்துள்ளதைப் பார்க்கிறான்.

சிறு செயல் புரிவதிலேயே நம்பிக்கையற்ற மக்களுக்கு பெருஞ்செயல் புரிவதில் நம்பிக்கை

எவ்வாறு ஏற்படும்? பலனைப் பற்றிய உறுதியில்லாத பொழுது பெருநோக்குடன் பெருஞ்செயலில் ஈடுபட்டு வீணாக வாழ்க்கையை வாட்டி வளைவெடுக்க வேண்டியதில்லை என்ற உணர்ச்சி மீதூர மந்தத்தில் புதைந்து கிடக்கும் மக்களைப் பார்க்கிறான்.

இந்தச் சூழ்நிலையை ஆழ்ந்து சிந்தித்த நமது சான்றோன் பின்வரும் முடிவுக்கு வருகிறான்.

நல்ல செயல்களைச் செய்ய வேண்டுமென்ற விருப்பம் எல்லோரிடமும் குடிகொண்டிருக்கிறது. இதில் விதி விலக்கு இல்லை. ஆனால் ''நல்ல செயலுக்கு நானூறு இடைஞ்சல்'' என்பதை நினைந்து அந்த விருப்பம் செயலாக உருவாவதில்லை.

சிறிது செயலில் வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அவ்வாறு வந்தாலும் எடுத்த அந்தச் செயலை தொகுத்து முடிக்க முயலுவதில்லை. சில வேளைகளில் இத்தகைய நல்ல செயல்கள் செய்ய வேண்டுவது தவிர்க்க முடியாததுதானா என்ற ஐயம் சிலர் நெஞ்சில் குருத்துவிட்டுக் குடைகிறது. இந்த ஐயம் அவர்கள் உள்ளத்திலிருந்து எளிதில் அகலுவதில்லை.

அழுக்குப்படிந்த அறிவும், முயற்சியற்ற உள்ளமும் உடைய தெளிவில்லாதவர்களே இவ்வாறு ஐயம் அறாதவர்களாக இருக்கிறார்கள்.

நல்வினைகளில் முழுமூச்சோடு ஈடுபட்டு நிற்பது ஒன்றுதான் மக்களின் கடமை. அதுவன்றி மக்களின் செயல்கள் பூவில் உதிர்ந்து போகுமா? பிஞ்சில் உதிர்ந்து போகுமா? அல்லது காய்த்துக் கனி தருமா என்றெல்லாம் எண்பது கோடி நினைந்து, குழப்பிக் குட்டையில் விழுந்து தவிப்பது அழகல்ல.

பிறவியின் கடமை இன்பத்திற்கு ஆதாரமான உணர்வு விளக்கம் பெறுவது. அந்த விளக்கம்

நற்செயல்களைத் தொடர்ச்சியாக இடையருது செய்து கொண்டிருப்பதனுலேயே உருவாகும். வைர மணிக் கல்லைத் தீட்டத் தீட்ட ஒளிவிடுவதுபோல் நற்செயல்களில் ஈடுபட ஈடுபட அந்த விளக்கமும் மிகுவது திண்ணம்.

மற்றபடி, மக்கள் விருப்பமெல்லாம் நடைமுறையாக வேண்டுமென்று நியதி இல்லை. நாம் நினைப்பதெல்லாம் சமுதாய சக்திகளின் சிக்கல் நிறைந்த இயக்கத்திற்குப் பொருந்தியிருக்க முடிகிற தில்லை. எனவே, விருப்பங்கள் எல்லாம் நிறைவேறும் என்று எதிர்பார்ப்பது அழகல்ல. இது சமுதாய வாழ்வின் படிப்பினை.

இத்தகைய முடிவுக்கு வந்த நமது சான்ருேன் செயலில் ஈடுபடவேண்டும் என்ற உண்மையை மக்களின் தரத்திற்குத் தக்கபடி அறிவுறுத்துகிருன்.

மிகவும் அரிய செயலான யானை வேட்டைக்குச் செல்லும் யானை வேட்டுவன் அவன் விரும்பியபடி யானையைப் பெறுகிருன். மிக எளிய செயலான காடை வேட்டைக்குச் செல்லும் காடை வேடன் காடையைப் பிடிக்க முடியாமல் வெறுங்கையோடு திரும்புகிருன். இவற்றைக் கண்கூடாக நாம் காண் கிருேம்.

ஆகவே, பெருமுயற்சி வெற்றி பெருது என்ருே சிறு முயற்சி உறுதியாக வெற்றி தருமென்ருே சொல்ல முடியாது. எனவே நற்செயல்கள் செய் வதையே மக்கள் முதன்மையாகக் கருத வேண்டும். மற்றவற்றைக் கருதுதல் அவர்கள் கடமையல்ல. நற்செயல்கள் செய்வோர் உயர்ந்தோராவர். உயர்ந் தோர் என்பதற்கு அறிகுறி உயர்ந்த விருப்ப முடையவராயிருப்பதாக இல்லாது நல்வினையில் ஈடுபட வேண்டியதை அழுத்தமாக வற்புறுத்து கிருன் நமது சான்ருேன். தன்னைச் சூழ்ந்து நின்ற

மக்களும் தன்னிடம் தெளிவு பெற வேண்டிய மக்களும் பல்வேறு இன்ப நாட்டம் உடையவர்களாக இருப்பதையும் பார்க்கிறான். குறிப்பாக சொர்க்க இன்பம், மறுபிறப்பின்பம், புகழின்பம் ஆகிய மூவகை இன்பங்களில் நாட்டமுடையவர்களாயிருப்பதைப் பார்க்கிறான். எனவே, இவர்கள் எல்லோரும் நல்ல செயல்களில் ஈடுபட விரும்பும் விதத்தில் பின்வருமாறு அறிவுறுத்துகிறான்.

மேற்படி உயர்ந்தோர்க்கு அவர்கள் செய்கின்ற நற்செயல்களின் சார்பில் ஏதேனும் நேருமாயின் தேவருலக இன்பம் கிடைக்கக்கூடும்.

ஆனால் தேவருலகில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு இப்பிறப்பில் செய்யும் நல்வினையின் பயனாக மறுபிறப்பில் இன்பம் கிடைத்தாலும் கிடைக்கக் கூடும்.

ஆனால் மறுபிறப்பிலும் நம்பிக்கை இல்லாதவர்கள் இமயமலையின் எவரெஸ்டு உச்சி அளவு மாபெரும் புகழை தம் நற்செயல்களால் இவ்வுலகில் இப்பிறப்பிலேயே நிலை நாட்டிவிட்டுப் பழிபாவமற்ற வாழ்வை முடித்துக்கொள்வது சிறந்ததன்றோ!

ஆகவே, எவ்வகையிற் பார்த்தாலும் நற்செயல்களை ஆனவரையில் செய்து கொண்டிருப்பதே நல்லது என்னும் முடிவில் யாரும் ஐயம் கொள்வதற்கு இடமில்லை.

இவ்வாறு நமது சான்றோன் விளக்க உரை நிகழ்த்தியதும் சூழ்ந்து நின்ற சந்தேகப் பேர்வழிகள் யாவரும் "தெளிவு கண்டோம்" என்று ஒரே குரலில் முழங்கினார்கள்.

நமது சான்றோன் யார்? அவன் பாடிய பாடல் எது?

நமது சான்றோன் **கோப்பெருஞ்சோழன்**. அவன் பாடிய பாடல் இதோ:

செய்குவங் கொல்லோ நல்வினை யெனவே
ஐய மறுஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவில்லோரே;
யானை வேட்டுபவன் யானையும் பெறுமே,
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே;
அதனால் உயர்ந்த வட்டத் துயர்ந்திசினோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றெய்யா வுலகத்து நுகர்ச்சியுங்கூடும்
தொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்
மாறிப் பிறப்பினி ன்மையும் கூடும்;
மாறிப் பிறவாராயினும் இமயத்துக்
கோடு யுர்ந் தன்ன தம் மிசைநட்டுத்
தீதில் யார்க்கையொடு மாய்தலறத் தவத்தலையே

—புறநானூறு-214.

[**இதன் பொருள்**: அறச்செயலைச் செய்வோமோ மாட்டோமோ என்று கருதிச் சந்தேகம் நீங்கார், அழுக்கு நிறைந்த அறிவும் முயற்சி குறைந்த உள்ளமும் உடையர் தெளிவில்லாதோர். யானை வேட்டைக்குப் போவோன் யானையையும் எளிதாகப் பெறுகிறான். காடை வேட்டைக்குப் போவோன் அது பெறாது வெறுங்கையனாகவும் திரும்புவான். அதனால் உயர்ந்த விருப்பத்தையுடைய உயர்ந்தோர்க்கு அவர்கள் செய்கின்ற நற்செயல்களின் சார்பில் எவையேனும் நன்மைகள் அடையக் கூடுமாயின் அவர்கள் சொர்க்க லோகத்தின் இன்பமும் அனுபவிக்கக் கூடும். அது கிடையாதென்ற ஐயம் ஏற்பட்டால் மறுபிறப்பில் இன்பம் எய்தக்கூடும். அதிலும் சந்தேகம் முளைத்தால் இமயமலையின் சிகரம் உயர்ந்தாற்போல தமது புகழை நிலைநிறுத்தி வசையில்லாத உடம்போடு இறத்தல் மிகச் சிறந்தது. அதனால் எப்படியும் நல்வினை செய்தலே கடமை.]

## சமுதாயக் காட்சி-7

படம் பிடித்தவர்:

## கணியன் பூங்குன்றனுர்

இவர், முதல் வரிசையில் முதலிடம் பெறத் தக்க சான்ருேர். பிசிராந்தையார் வரிசையைச் சார்ந்தவர்.

இவர் இடரிலும் சுடரிலும், இன்பத்தும் துன்பத்தும், வாழ்விலும் தாழ்விலும், எவ்விடத்தும் எந்நிலையிலும், அயராத உள்ளமும் கலங்காத அமைதியும் உடையவர்.

இச்சான்ருேர், நலம் செய்தார் என்று ஒருவரைப் புகழ மாட்டார்; தீது செய்தாரென்று ஒருவரை இகழ மாட்டார்; இவ்வாறே பெரியோரான ஒருவரைத் தலைக்குமேல் தூக்கிவைத்து ஆடுவதும், சிறியோரான ஒருவரை எள்ளி நகையாடுவதும் அறியாதவர்.

உயிர்களெல்லாம், தாம்தாம் செய்கிற செயலுக்கு ஏற்ப இன்பமும் துன்பமும், உயர்வும் தாழ்வும், செல்வமும் வறுமையும் அடையும் என்ற உண்மையை நூல்கள்மூலம் கற்று அறிந்து தெளிந்தவர்.

மேற்படி உண்மையின் நடமாடும் கோயிலாக இவர் வாழ்க்கை அமைந்து விளங்கியதால் இவர்

எத்தகைய மன்னர்களையும் வள்ளல்களையும் பாராட்டி பாடினார் இல்லை.

இதைக் கண்ட அக்காலச் சான்றோர்கள் வியப்படைந்தார்கள். சிலர் இவரை அணுகி ''பாடவல்ல சான்றோராகிய நீவீர் எவரையும் பாடாமல் இருக்கக் காரணம் என்ன?'' என்று கேட்டார்கள்.

அதற்கு நமது சான்றோர், தாம் தெளிந்த கருத்து மணிகளைத் தொகுத்துப் பின்வருமாறு அருளினார்!

''எத்தனை எத்தனையோ ஊர்களைக் கண்டிருக்கிறேன்; எத்தனை எத்தனையோ மக்களைப் பார்த்திருக்கிறேன்; பழகி இருக்கிறேன். நாடு, மொழி, நிறம், இன்னபிற, மனிதனிலிருந்து மனிதனைப் பிரித்து வைக்கும் தடைச்சுவர்களெல்லாம் எனது அறிவு வெளிச்சத்தில் நொறுங்கித் தவிடு பொடி ஆகிவிடுகின்றன. எல்லா ஊர்களும் எனது ஊர்களே; எல்லா மக்களும் எனது உறவின் மக்களே.

எனக்குத் தீமை செய்யும் பகைவன் என்று ஒருவன் எங்கும் என்றும் எதிலும் இல்லை. எனக்கு நன்மை செய்யும் நண்பன் என்று ஒருவன் எவ்விடத்தும் எப்பொழுதும் எவ்விதத்திலும் இல்லை. ஏனென்றால் எனது செயலுக்குத் தக்கபடி நன்மையும் தீமையும், பெருமையும் சிறுமையும் என்னாலேயே எனக்கு ஏற்படுகின்றன எனக் காண்கின்றேன். ஆகவே நன்மையும் தீமையும் பிறர்தர வருவன அல்ல என்பது எனது அழுத்தமான கருத்து.

முன்பு கூறியது மாதிரி, துன்பமும் இன்பமும் செய்யும் செயலின் விளைவாகவே நிகழுகின்றன என்பதுதான் எனது முடிவு.

பிறப்பும் இறப்பும் உலகத்து இயற்கை; பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதி. இதில் புதுமை ஒன்றும் இல்லை.

ஆகவே, வாழ்வில் விருப்பம் காட்டுகிற பொழுது இனிப்புக் கொள்வதும், வெறுப்புத் தட்டு கிற பொழுது கசப்புக் கொள்வதும் என்னிடம் இல்லை.

வானம் சோனு மாரி பொழிந்து பெருவெள்ளம் கட்டுக்கடங்காமல் பாறைகளை எதிர்த்து மீறிப் பேரிரைச்சலுடன் கரைபுரண்டோடுகிற பெரிய ஆற்றில் செல்லும் தெப்பம், நீரோட்டத்தின் செயல் வழியே அது இழுக்கிற இழுப்புக்குத் தக்கவாறு சென்று கொண்டிருக்கும் அல்லவா? அது போல், வாழ்வு செயலுக்குத் தக்கபடி பயன் என்ற நியதிவழியே பிசகின்றிச் செல்கிறது. பகுத்தறிவு மிக்க சான்றோர்கள் இந்த உண்மையைத் தெள்ளத் தெளியக் கண்டு காட்டியிருக்கிறார்கள். இதே உண்மையை அவர்கள் வழி நானும் காண்கிறேன்.

எனவே, இந்த உலகத்தில் அருமை பெருமை களில் மிக்கவர் என்று யாரையும் துதிபாடி வியப் பதும் இல்லை. அவற்றில் குறைந்தவர் என்று யாரை யும் இகழ்ந்து புறக்கணிப்பதும் இல்லை.

அன்பும் பண்பும், அறிவும் அறனும் நிறைந்த நமது சான்றோர் உலகம் மணம் அமைந்து வாழ வல்ல முன் மாதிரியான தமது அரிய வாழ்க்கை முறையை எடுத்துக் காட்டியதும் கேட்டோர் தெளிவு எய்தி வணங்கிச் சென்றார்கள்.

நமது சான்றோர் யார்? அவர் அருளிச் செய்த பாடல் எது?

சான்றோர் **கணியன் பூங்குன்றனார்**. அவர் தந்த பாடலமுது இதோ:

**''யாதும் ஊரே**
**யாவரும் கேளிர்!**
**தீதும் நன்றும்**
**பிறர் தர வாரா.**

நோதலும் தணிதலும்
அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ
தன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன் றும்
இலமே; மின்னொடு
வானம் தண்துளி
தலைஇ யானாது
கல் பொருது இறங்கும்
மல்லல் பேர் யாற்று
நீர்வழிப் படூஉம்
புணை போல் ஆருயிர்
முறை வழிப் படூஉம்
என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம்
ஆகலின் மாட்சியில்
பெரியோரை உயர்த்தலும்
இலமே.
சிறியோரை இகழ்தல்
அதனிலும் இலமே. —புறநானூறு-192.

[இதன் பொருள்: எமக்கு எல்லாம் ஊர்; எல்லாரும் சுற்றத்தார். தீயதும் நல்லதும் எம்மால் வருமன்றிப் பிறர் தரவாரா. நோதலும் அது தீர்தலும் அவற்றைப்போல் எம்மாலேயே வரும். சாதலும் புதியதல்ல, கருவில் தோன்றிய நாள் முதல் உள்ளது. ஆகவே வாழ்தல் இனியது என்று மகிழ்ச்சி அடைகிறதும் இல்லை. ஒரு வெறுப்பு வந்த பொழுது இன்னாதது என்று இருக்கிறதும் இல்லை. மின்வெட்டி, மழை பெய்து கரை புரண்டோடும் வெள்ளம் கல்லை அலைத்துப் பேரிரைச்சல் கிளப்பும் பெரிய ஆற்றின் நீர் வழியே செல்லும் தெப்பம்போல அரிய உயிர் 'செயலுக்கேற்றப் பலன்' என்ற

நியதி வழியே செல்லும். இந்த உண்மையை நன்மைக் கூறுபாடு அறியும் சான்றோர் நூல் வழியாகத் தெளிந்திருக்கிறோம். எனவே, மாட்சி மிக்க பெரியோரைப் புகழ்தலும் இல்லை. சிறியோரைப் பழித்தல் அது கூட இல்லை.]

## சமுதாயக் காட்சி-8

படம் பிடித்தவர்:

## மதுரை ஆசிரியர் நல்லந்துவனார்

சமுதாய மனிதனிடம் எண்ணற்ற குணச்சித்திரங்களைக் காண்கிறோம். மனிதனுடைய வாழ்வு வளர வளர சிக்கலும் இடுக்கணும் நிறைந்த வாழ்வு உருவாகிறது. எத்தனை எத்தனையோ வகை வகையான குணவேறுபாடுகள் தோன்றுகின்றன.

நமது சான்றோர் அனுபவக்கடல். பல்வேறு குணச்சித்திரங்களைப் பயின்று தெளிந்தவர்.

ஒருநாள் நமது பெரியார் உள்ளக் கிளர்ச்சியில் திளைத்து நின்றார். பிறிதொரு பெரியார் அவரை அணுகி சில சிறந்த குணங்களைப் பற்றிய கருத்து வரையறைகளை உங்களிடம் கேட்டறிய வந்துள்ளேன் என்றார். 'நன்று' சேளுங்கள், என்றார் நமது சான்றோர்.

கேள்வி: இல்வாழ்க்கை நடத்துவது என்றுசொல்லுவது என்ன?

பதில்: வறுமைப்பட்டவர்களுக்கு எவ்வகையிலும் ஏதாவது ஒரு உதவி செய்தல்.

கேள்வி: ஒன்றைப் பாதுகாத்தல் என்று கூறினால் பொருள் என்ன?

பதில்: கூடினவர்களைப் பிரியாமலிருப்பது. அதாவது 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்றபடி நட்புறவு கொண்டு ஒருமுறை கூடிவிட்டால் அதைக் கூடியவரையில் பிரிந்துவிடாதபடி பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பது.

கேள்வி: 'மனிதப் பண்பு' என்று கூறுவது என்ன?

பதில்: உலக நடப்பு எவ்வாறு செல்கின்றது என்பதைத் தெளிந்து தெரிந்து அந்த வழியில் உறுதியோடு செல்வது.

கேள்வி: 'அன்பு' என்று எதைச் சொல்வது?

பதில்: தன்னை அண்டி, ஒண்டிக் கிடக்கும் சுற்றத்தார்களைக் கைவிடாதிருப்பது.

கேள்வி: 'அறிவு' என்று எதைக் கூறுவது?

பதில்: அறிவிலிகள் தன்னைப் பார்த்துச் சொல்லும் பயனிலாத சொற்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

கேள்வி: 'ஒருவரோடு ஒருவர்க்கு உறவு' என்று சொல்வதன் கருத்து என்ன?

பதில்: சொன்ன சொல் மாறுமல் நடப்பதால் ஏற்படுவது.

கேள்வி: 'நிறை' என்று சொல்வதன் அர்த்தம் என்ன?

பதில்: மறைவுகளை திரையை விலக்கி வெளிப் படுத்தாமல் அடங்கி ஒழுகுதல்.

கேள்வி: 'முறை' என்பதற்கு வரையறுப்பு என்ன? (இது அரசனைப் பற்றி எழுந்த கேள்வி)

பதில்: தம்மவர் என்று கண்ணேட்டம் செய்யாமல், அவர் செய்த குற்றத்திற்கு ஏற்ப அவர் உயிரை வாங்கல்.

கேள்வி: 'பொறுமை' என்று சொல்வது என்ன?

பதில்: தனது பகைவரை உரிய காலம் வரும் வரையில் பொறுத்துக் கொள்வது.

மயக்கமில்லாமல் வாழ்வில் கடைப்பிடிக்கத் தக்க வண்ணம் இவ்வளவு தெளிவாக வரையறுத்துச் சொன்னவர்கள் யான் அறிந்த மட்டில் யாரும் இல்லை என்று வந்த பெரியார் மகிழ்ந்து கைகூப்பி விடை பெற்றுச் சென்றார்.

நமது சான்றோர் யார்? அவர் பாடிய பாடல் எது? நமது சான்றோர் 'கற்றோர் ஏத்தும் கலித் தொகை' யில் முதல் நான்கு கலிகளையும் ஒருங்கு தொகுத்து ஐந்தாம் கலியாகிய நெய்தற் கலியையும் பாடிச் சேர்த்து 'கலித் தொகை' நூலை ஆக்கித்தந்த நல்லிசைப் புலவர். இவர் பெயர் **மதுரை ஆசிரியர் நல்லந்துவனார்**. இவர் பாடிய பாடல் இதோ!

ஆற்றுதலெ ன்பதொன்
    றலர்ந்தவர்க் குதவுதல்
போற்றுதலெ ன்பது
    புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெ னப்படுவது
    பாடறிந் தொழுகுத
லன் பெனப்படுவது
    தன்கிளை செறாஅமை
யறி வெனப்படுவது
    பேதையர் சொல் நோன்றல்
செறிவெ னப்படுவது
    கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது
    மறை பிற ரறியாமை

முறை எனப்படுவது
கண்ணோடாது உயிர்வௌவல்
பொறை எனப்படுவது
போற்றாரைப் பொறுத்தல்

—கலித்தொகை—133: 6-14.

[பொழிப்புரை: வாழ்க்கை நடத்துவது என்பது இல்லை என்று வந்தவர்களுக்கு உதவி செய்வது; பாதுகாத்தல் என்பது, ஏற்பட்ட நட்பு எளிதில் உடைந்து விடாமல் காத்துக் கொள்வது; மக்கள் தன்மை என்று சொல்வது, உலகநடை தெரிந்து அதன்படி நடப்பது: அன்பு என்று சொல்வது, சுற்றத்தார்களைக் கைவிடாதிருப் பது; அறிவு எனப்படுவது, அறியாதவர் களுடைய பேச்சைப் பொறுத்துக் கொள்வது; உறவு எனப்படுவது, சொன்ன சொல் மறவாமல் நடப்பது; நிறை என்பது, மறைவுகளை அம்பலப் படுத்தாமல் அடக்கத்துடன் நடந்துகொள்வது; முறை என்பது, வேண்டியவர் என்று பாராமல் குற்றத்தைப் பார்த்து அதற்கு ஏற்ப கொலை தண்டனை புரிவது; பொறுமை என்பது, உரிய காலம் வரும் வரையில் பகையைப் பொறுத்துக் கொள்வது.]

## சமுதாயக் காட்சி-9

படம் பிடித்தவர்:

## காப்பியாற்றுக் காப்பியனார்

நமது சான்றோர், சமுதாய வாழ்வில் அரசியலின் இடத்தை மிகச் சிறப்பாகப் பார்க்கிறார். ''மன்னர் உயிர்த்தே மலர்தலை உலகம்'' என்று கண்ட சான்றோர்கள் வாழ்ந்த காலம் இவர்காலம்.

உலகில் பிறர் உதவியின்றி வாழ்தல், இந்திரன், சந்திரன், மகேந்திரனுக்கும் முடியாத காரியம். ஒருவருக்கு ஒருவர் உதவி அளித்து வாழும் முறையிலேயே உலக இயற்கை நடைபெறுகிறது. பிறர் வாழ்வுக்கு உதவி புரிவதில் தம் வாழ்வுக்கு வலிமை பெருகும் அடிப்படையிலேயே வாழ்வு அமைந்து கிடக்கிறது. இந்த உண்மைகளையெல்லாம் நமது புலவர் வேறு தெளிவாகக் காண்கிறார்.

மேலும், சமுதாயத்தின் மையமாக விளங்கும் மன்னன் எவ்வளவுக் கெவ்வளவு மன்னுயிர்களைப் பேணிக் காப்பாற்றுகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு அவன் வாழ்வும் வளமும் மாண்புறுவதைக் காண்கிறார்.

நமது சான்றோருக்கு ஒரு முறை களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்ற சேர அரசனை வாழ்த்தும் வாய்ப்புக் கிடைத்தது. அரசு பற்றி தாம் வாழ்வில் கண்டு தெளிந்த மேற்கூறிய உண்மைகளை மனக்கண் முன் நிறுத்தி அரசனை வாழ்த்தினார்.

சேரமன்னனை 'நின் பொருட்டு நீ வாழ்க!' என்று வாழ்த்தவில்லை.

களங்காய்க் கண்ணி, பகைவர்க்கு அருளுதலையும், நண்பர்களுக்கு உதவுதலையும், அவன் குடை நிழலில் அவனை அணுகுவோர்க்கெல்லாம் அவன் உதவிய வண்ணம் இருத்தலையும் அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டி, ''அரசே, இந்த உலகத்தோர் பொருட்டு நின் செல்வமும் நின் வாழ்நாளும் வாழ்க!'' என்று வாழ்த்தினார்.

இந்த வாழ்த்தை இன்று படித்தாலும் நமது மெய் சிலிர்க்கிறது; நாம் பரவசமடைகிறோம்.

இந்தச் சான்றோர் யார்? இவர் பாடிய பாடல் செந்தேன் எது?

இவர் பெயர் **காப்பியாற்றுக் காப்பியனார்.** இவர் பாடிய பாடல் இதோ!



**வாழ்கநின் வளனே நின்னுடை வாழ்க்கை
வாய்மொழி வாயர் நின்புகழ் ஏத்தப்
பகைவர் ஆரப் பழங்கண் அருளி
நகைவர் ஆர நன்கலம் சிதறி
ஆன்று அவிந்து அடங்கிய செயிர்தீர் செம்மால்!
வான்தேய் நல்லிசை உலகமொடு உயிர்ப்பத்
துனங்குடி திருத்திய வலம்படு வென்றியும்
மாயிரும் புடையில் மாக்கழல் புனைந்து
மன்னெயில் எறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னலைச் சிறப்பின் நின் நிழல் வாழ்நர்க்குக்
கோடறவைத்த கோடாக் கொள்கையும் நன்றிபெரி
துடையையால் நீயே
வெந்திறல் வேந்தே இவ் உலகத் தோர்க்கே.**

—பதிற்றுப்பத்து: 37

[**பொழிப்புரை:** உண்மை மொழிகளையே பேசும் நாவினர் நின்பெருமையை பாராட்ட பகைவர்

களும் மனநிறைவு அடையும் வண்ணம் பழைய கண்ணோட்டத்தோடு அருள் சுரந்து நண்பர்கள் மனம் நிறையும்படி சிறந்த அணிகலன்களை அவர்களுக்கு வாரி வழங்கி, அச்செயல்களால் பெருமிதம் எதுவும் கொள்ளாமல் அறிவு அகன்று புலன் அவிந்து அருளில் அடங்கிய தீது தீர்ந்த தலைவனே! வானளாவிய நின் புகழ் உலகம் எங்கணும் மணம் வீச, பகைவரால் நிலை கலங்கும் குடிமக்களை அவ்வாறு கலங்கா வண்ணம் செய்து, நினது பேராற்றலால் ஒழுங்கையும், அமைதியையும் நிலைநாட்டி மேன் மேலும் வெற்றி பெறுவதற்குரிய அடிப்படை வெற்றி கண்டாய். பெருமைக்குக் காரணமான கரிய பனந்தோட்டு மாலையும் சிறந்த வீரக்கழலும் அணிந்தாய். நிலைத்த பகைவர் அரணை அழித்து அங்கிருந்த வீரர்களுக்கு விடுதலை தந்தாய். தொன்மை சிறப்பு மிக்க நின்நிழல் வாழ் வீரர்களுக்குக் கொடுமையில்லாதபடி செய்தாய். நிலைகோணுத கொள்கையைச் சிறப்புடன் கடைப்பிடித்தாய். இத்தகைய பெரும் பேராற்றல் வாய்ந்த அரசே! இவ்வுலகத்தார் பொருட்டு நின் செல்வம் வாழ்க! நின் வாழ் நாள் வாழ்க!]

## சமுதாயக் காட்சி-10

படம் பிடித்தவர்:

## பக்குடுக்கை நன்கணியார்

நமது சான்றோர் வாழ்க்கைக் கலையின் தெள்ளமுதம் உண்டவர். வாழ்வின் இன்பத்தையும் துன்பத்தையும், மேட்டையும் பள்ளத்தையும், ஒளியையும் இருளையும் அக்குவேறு ஆணிவேருக அலசிப் பார்த்த பெருமான்.

அவர் கண்ட அரசர்களும் செல்வர்களும் பேராசையில் மிதந்த பெருச்சாளிகளாயிருந்தார்கள். ''உலுத்தவனுக்கு உலகம் உண்டு, இளைத்தவனுக்கு உலகம் இல்லை'' என்ற கொள்கை அவர்களைப் பிடித்து ஆட்டிக்கொண்டிருந்தது.

நமது பெரியார், பொருளீட்ட வெறியும், போர்க்கோலமும் கும்மாளம் போடுவதைக் கண்டார். இதன் விளைவாக நாட்டில் இன்ப வாழ்வுக்கு இடமில்லை என்பதையும் கண்டார்.

சமுதாய வாழ்வுக்கு வழிகாட்ட விரும்பிய நமது சான்ருேர் பின்வருமாறு கூறினர்:

''ஒரு வீட்டில் காப்பறை முழங்குகிறது; மற்ருெரு வீட்டில் மணப்பறை முழங்குகிறது. ஒருத்தி சடை போட்டு பூச்சூடி அழகு வழிய நிற்கிருள். வேருெருத்தி கணவனைப் பிரிந்து கண்கலங்க

நிற்கிருள். இவ்வாறு இருவேறு வாழ்வைப் படைத்தவன் பண்பில்லாப் பாவி.

''மேனேக்காக இந்த மாறுபட்ட காட்சிகளைக் காண்பவர்கள் உலகம் இனிமையற்றது'' என்கிருர்கள்.

''அது சரியல்ல.''

''உலக இயல்பை உணர்ந்தவர்கள் எதனிலும் இனிமை காண முயலுதல் வேண்டும்!''

ஆகா! நமது சான்ருேர் உலகில் ''வாழ்வாங்கு வாழ'' வகுத்துக் காட்டும் வழி எவ்வளவு பண்பட்டது!

நமது சான்ருேர் யார்? நமது சான்ருேர், **பக்குடுக்கை நன்கணியார்.**

அவர் பாடிய பாடல் எது?

இதோ:

''ஓர் இல் நெய்தல்
கறங்க, ஓர் இல்
ஈர்ந்தண் முழவின்
பாணி ததும்ப
புணர்ந்தோர் பூவை
அணியப் பிரிந்தோர்
பைதல் உண் கண்
பனிவார்பு உறைப்பப்
படைத்தோன் மன்றஅப்
பண்பி லாளன்
இன்னது அம்ம இவ்வுலகம்
இனிய காண்கிதன்
இயல் புணர்ந் தோரே''

—புறநானூறு-194.

ஒரு மனையில் காப்பறை ஒலிக்கிறது. மற்றொரு மனையில் மணப்பறை முழக்கம் மிக 'குளு குளு' வென்று ஒலிக்கிறது; காதலரோடு கூடிய மகளிர் பூச்சூடி அழகு செய்கிறார்கள்; கணவரைப் பிரிந்த பெண்கள் கண்கள் நீர் சொரிய நிற்கிறார்கள். இவ்வாறு இனிப்பும் கசப்புமாக வாழ்வைப் படைத்தவன் பண்பில்லாதவன். கொடிது இவ்வுலகத்தின் இயற்கை என்கிறார்கள் சாதாரண மக்கள். ஆகவே உலகத்தின் இயல்பை அறிந்தவர்கள் எதனிலும் இனிமை காணக் கற்கவேண்டும்.

# தமிழ் அமிழ்தம்

## குறுந்தொகைக் காட்சி

சங்க காலப் பாடல்கள் கற்பனை ஆதிக்கம் கொண்டவைகள் அல்ல; எதார்த்தத்தில் ஊறி நிற்பவை.

அந்தநாள் வாழ்க்கையும் இன்றுபோல் சிக்கலான வாழ்க்கை அல்ல; இயற்கையோடியைந்த எளிய, சிக்கல் குறைந்த வாழ்க்கை.

சங்ககால இலக்கியங்களில் ஒரு சிறந்த இலக்கியம் குறுந்தொகை. அகப் பொருள் உணர்ச்சிகளை மிக அழகுபட வடித்துத் தொகுத்துக் காட்டும் நூல் அது. அதில் ஒரு பாட்டு இரண்டு ஆத்மாக்களின் ஒட்டுறவைப் பற்றிக் கூறுகிறது.

ஒரு ஆணும் பெண்ணும் நெஞ்சம் கலக்கிறார்கள். எத்தகைய தட்டுத் தடங்கலும் இல்லாமல் கலக்கிறார்கள். சாதிச் சுவரோ, நிறத்தடையோ, மொழி வேற்றுமையோ, நாட்டுப் பிரிவினையோ இந்தக் கலப்புக்குக் குறுக்கே மறுக்க வரவில்லை. எந்த வேறுபாடும், எந்த ஒரு மாறுபாடும் இந்த அன்புப் பிணைப்புக்குக் கிட்டமுட்ட நெருங்கவில்லை. இந்தக் காதல் ஒருமிப்பு மதயானைபோல் தாராளமாய் வீறுநடை போட்டுச் செல்கிறது.

உள்ளத்தில் நிகழும் உண்மை நிகழ்ச்சிக்கு இன்னிடம்தான் இன்ன காலத்தில்தான் இன்ன இடத்தில்தான் தோன்றும் என்ற கட்டுப்பாடு உண்டா? இல்லை.

இந்நெகிழ்ச்சிக்கு உரியவர் எவரோ, அவர் எதிர்ப்படும் பொழுது அது தானே மலர்ந்து, மணம்வீசும். தங்குதடையின்றி வெள்ளப் பெருக்கு போல பெருக்கெடுத்துப் பாயும்.

செம்மண் நிலத்தில் மழைநீர் பெய்தால் அந்த மண்ணின் நிறம் நீரின் நிறமாகும். அந்த மண்ணின் சுவை நீரின் சுவையாகும். இதுபோன்று காதலன்பு மிக்க நெஞ்சம் இரண்டும் கலக்குமானல் இரண்டும் ஒன்றில் ஒன்று கலந்து ஒரு தன்மைத்தாய் விளங்கும்.

மண் வேருகவும், மழை நீர் வேருகவும் தனித் தனியாக இருக்கும்போது, உலகில் எவ்வகை வாழ்க் கையும் இல்லை. அது மாதிரி ஆண், பெண் உள்ளங் கள் தனித்தனியாக இயங்கும் பொழுதும் உலகத் தில் வாழ்க்கை ஒன்றும் இல்லை என்றே சொல்ல வேண்டும்.

எனவே, இயற்கை அவ்வாறு தனித்தனியாக இருக்க விடுவதில்லை. தவிர்க்க முடியாதபடி, இயற்கை ஒன்று கூட்டுவிக்கிறது.

அங்ஙனம் இயற்கை நிகழ்ச்சியின்படி ஒன்று கூடுவதுதான் உண்மை நிகழ்ச்சி. அத்தகைய அன்புப் பிணைப்புதான் வலிவானது, தளராதது, உறுபயன் தருவது.

இந்த இயற்கையோடியைந்த அருமருந்தன்ன நெஞ்சக் கலப்பை பின்வரும் குறுந்தொகைப் பாடல் அற்புதமாகத் தீட்டிக் காட்டுகிறது.

குறுந்தொகைப் புலவர் ஊட்டும் பாடல் அமுதத்தை இதோ சுவையுங்கள்!

யாயும் யாயும் யாராகியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயில் நீர்போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே

—குறுந்தொகை-40.

[**இதன் பொருள்:** இதற்கு முன் என் தாயும், நின் தாயும் எத்தகைய தொடர்பேனும் உடையவர்களா? இல்லை. என் தந்தையும், உன் தந்தையும் எந்த முறையில் உறவினர்? ஒரு முறையிலும் இல்லை. நானும் நீயும் ஒருவரையொருவர் எப்படி அறிந்து கொண்டோம்? ஒரு வழியிலும் இல்லை. பின் செம்மண் நிலத்தில் பெய்த மழை நீர்போல அன்புடைய நெஞ்சங்கள் தாமாகவே இயற்கையாகக் கலந்தன.]

## தமிழ் இலக்கியத்தில் கருத்துப் புரட்சி

இலக்கியம் சமுதாயச் சூழ்நிலையில் உருவாகும் மரம் மட்டுமன்று; சமுதாயச் சூழ்நிலையை உருவாக்கும் வித்துமாகும். சரித்திர வளர்ச்சி உருவற்ற சக்திகளால் உருவாவதில்லை. சரித்திரம் மனிதனுலும் கருத்துக்களாலும் உருவாகின்றது. இலக்கியமும், தத்துவஞானமும், அரசியல் கோட்பாடுகளும், நீதி நெறிகளும் சரித்திர வளர்ச்சியின் சக்திமிக்க கருவிகளாய்த் திகழ்கின்றன.

இலக்கியத்தின் புரட்சிக் கடமை என்ன? மகத்தான மரபு யாது? எழுத்தாளனைத் தன்னுணர்வு, குறுகிய தனி முயற்சி என்ற தளைகளிலிருந்து விடுவிப்பதும் படைப்பாற்றல் மிக்க எழுத்தாளனை அவன் தன் ஒரு தனிப் பெருங் கடமையோடு அதாவது உண்மையை ஒட்டுமொத்த யதார்த்தத்தை ஒட்டிய அறிவைப் பெறும் கடமையோடு நேருக்கு நேர் கொணர்ந்து நிறுத்துவதும்தான்.

### மாற்று உரு கொடுக்கிறான்

தனது உள் உணர்ச்சியின் தூண்டுதலால் எழுத்தாளன் யதார்த்தம் (Reality) என்ற பழுக்கக் காய்ச்சிய உலோகத்தை எடுத்து சம்மட்டியடி கொடுத்து தனது நோக்கத்திற்கேற்ப மாற்றுருக் கொடுக்கிறான். நோவாமி மிச்சிஸன் என்ற பேராசிரியனின் சொற்றொடரில் சொன்னால், சிந்தனையின் பலாத்காரங்களால் வெறி கொண்டு

யதார்த்தத்தை உதை உதையென்று உதைத்து மாற்றுருக் கொடுக்கிறுன். படையலின் முழு நடைமுறையும், கலேஞனின் முழு பிரம்மப் பிரயத்தனமும் யதார்த்தத்தோடு நடைபெறும் இந்தப் பலாத்கார மோதலில்தான் பொதிந்து கிடக்கிறது. உலகத்தைப் பற்றி ஓர் உண்மையான ஓவியத்தை உருவாக்கும் இந்த நன்முயற்சியில்தான் அடங்கிக் கிடக்கிறது.

இந்த வெளிச்சத்தில் தமிழ் இலக்கியத்தில் கருத்துப் புரட்சியைப் பார்க்க விரும்புகிறேன்.

இவ்வாறு தமிழிலக்கியத்தின்கண் வீசியதும் தொல்காப்பியன், சங்க காலச் சான்றேர்கள், வள்ளுவன், காவியப் புலவர்கள் கம்பன், பாரதி ஆகியோர் என்முன் காட்சியளிக்கிறுர்கள்.

## சிறந்தது பயிற்றல்

''பல்புகழ் நிறுத்த படிமையோனுன்'' இலக்கண மாமேதை தொல்காப்பியன் பல்லாயிரம் ஆண்டைய தமிழர் வாழ்க்கையை வடித்து வரையறுத்த வள்ளல். அவர் ஒரு சூத்திரம் சொல்கிறுர்.

> ''காமஞ் சான்ற கடைகோட் காலே
> ஏமம் சான்ற மக்களோடு துவின்றி
> அறம் புரி சுற்றமொடுஉ கிழவனும் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இருந்தன் பயனே''

தமிழ் மக்களின் வாழ்க்கைச் சித்திரமாகிய பொருளாதாரத்தில் கற்பியலில் வரும் இந்தச் சூத்திரம் சிறந்தது பயிற்றலேக் குடும்ப வாழ்வின் பயனுக எடுத்தோதுகிறது. குடும்ப வாழ்வின் முதனிலேயைத் தாண்டி, முதிர்ந்த நிலே அதாவது அருள்நிலே எய்திய தலேவன், தலேவியர் எல்லோரும் இன்புற்று இருக்க நினேப்பதுவே அல்லாது வேறென்

றறியாது. ''பணி புரிய வேண்டிய கடமை.'' கடமையை எத்துணை அற்புதமாகத் தொல் காப்பியர் வற்புறுத்துகிறார் பாருங்கள். எத்தகைய பண்பட்ட சமுதாய வாழ்விலிருந்து இத்தகைய கருத்து முளைத்திருக்க வேண்டும்; சிந்தியுங்கள்!

## சுடர்மிகும் வழிகாட்டி

சங்ககால ஏனைய புலவர்கள் காட்டிய இரண் டொரு கருத்துக்களைக் கவனிப்போம்:

> ''உண்பதுநாழி உடுப்பதி ரெண்டே
> பிறவும் எல்லாம் ஓரோக் கும்மே''
> செல்வத்துப் பயனே ஈதல்
> துய்ப்பேம் எனினே தப்பு நபலவே

—புறம்: 189.

நல்லிசைப் புலவர் பெருமானுன நக்கீரர் அன்பும், ஒற்றுமை உணர்ச்சியும் தழைக்க வழி காட்டுகிறார். ''யாதும் ஊரே யாவரும் கேளிர்' (192) என்ற கணியன் பூங்குன்றனாரின் பொருள் செறிந்த சொல்லும் கருத்தூன்றத் தக்கது.

> ''நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
> அல்லது செய்தல் ஒப்புமின்''

—புறம்: 195.

இந்த அமுத வாக்கு இன்றும் நாளையும், என்றும் எங்கும் மனித வாழ்வுக்குச் சுடர் மிகும் பொது வழிகாட்டி என்பதில் யாருக்கும் ஐயம் இருக்க முடியாது. எதிர்மறையாக உலகை நல்வழிப் படுத்தும் இந்தப் புலவரின் கூற்று ''சுவைக்கும் தொறும் சுவைக்கும் தொறும்'' இன்பம் பயக்க வல்லது.

## பொற்கால வாழ்வு

மனித தத்துவக் (Humanism) கொடியை உயர்த்திப் பிடிக்க சங்க காலச் சான்றோர்கள்

ஈகையை அதன் சிறந்த அம்சமாகப் போற்றினர்; பற்பல கோணங்களினின்றும் அதைப் பாராட்டினர். கருத்துக்களை அன்னர் கை தேர்ந்து கையாட அந்தப் பொற்கால வாழ்வு அத்துணை அனுபவம் செறிந்து செழித்து நின்றது.

''ஈயென விரத்தல் இழிந்தது அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தது
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தது
அதனெதிர் கொள்ளேன் என்றல்
அதனினும் உயர்ந்தது"

இந்த அடிகளில் புலவர் இரவாமை, ஈகை என்ற சிறந்த மனிதப் பண்புகளை எவ்வாறு வியத்தகு விதத்தில் தூக்கி வைத்துப் புகழ் கிருர், பாருங்கள்:

''. . ஆங்குச்
செய் வெல்லாம் செய்தனன்''

—புறம்: 239.

அன்றைய எளிய புலவர், இனிய, அழகிய தெள்ளிய தன்மான வாழ்வை சித்தரித்துக் காட்டும் பொழுது,

''வலியர் என வழிமொழியவன்
மெலியர் என மீக் கூறலன்
பிறரைத் தான் இரப்பு அறியலன்
இரந்தோர்க்கு மறுப்பு அறியலன்

என்ற அடிகளைப் படிக்கையில் அந்தச் செம்மை வாழ்வை நினைந்து நினைந்து செம்மாந்து தமிழ்ப் பெரியார் திரு. வி. க. வோடு அணிவகுத்து நின்று 'இயற்கையோடியைந்த இன்பம், இன்பத்தோ டியைந்த வாழ்வு' என்று கூறத் தோன்றுகிறது.

## உலகம் உண்டு

கவியரசனும், புவியரசனுமான இளம்பெரு வழுதி ''உலகம் உண்டு'' என்று பாடல் பாடு கிறான். அதில் தனக்கென வாழாப் பிறர்க்குரியா ளர் வாழ்வதால் 'உலகம் உண்டு' என்கிறான். சரித் திரம் காணுக் காலத்திலிருந்து இன்றுவரை—ஏன் நாளையும் உச்சிமேல் வைத்து மெச்சும் சான்றாண் மைக்குத்—தமிழரின் லட்சிய வாழ்வுக்கு—இளம் பெருவழுதி, இந்தப் பாடலில் நெஞ்சையள்ளும் நிக ரற்ற விளக்கம் தருகிறான். பாட்டைத் தருகிறேன், படியுங்கள்! நாவினிக்க, நெஞ்சினிக்கப் பயின்றுப் பயின்று பாராப் பாடம் ஆகும்வரை படியுங்கள்!

''உண்டால் அம்ம இவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயை வதாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்னமாட்சி அனையராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.''

—புறம்: 182.

''அமிழ்தம் இயைவதாயினும் தமியர் உண் டலும் இலர்'', ''புகழ் எனின் உயிரும் கொடுக் குவர்'', ''பழியெனின் உலகுடன் பெறினும் கொள் ளலர்''—

இவற்றினும் உலக வாழ்வில் தமிழனுடைய இலட்சிய வாழ்வுக்கு வேறென்ன குறிக்கோள் தேவை?

## வள்ளுவர் அளிக்கும் காட்சி

இங்கிருந்து ''வான்மறை'' தந்த வள்ளு வனிடம் செல்வோம். மூவேழு வள்ளல்களினும்

வள்ளலாகிய வள்ளுவப் பெருந்தகை கரைகாணுக் கருத்துச் செல்வக் களஞ்சியத்தோடு நிற்கிறான்.

''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட'' தமிழ்த்தாய் என்றான் பாரதி. இன்னும் எத்தனை உலகங்கள் தோன்றினும் அவ் வுலகங்களில் மக்கள் தோன்றினும் வரையாது வழங்கக் கருத்துக் கருவூலம் தந்த வள்ளுவனைப் பெற்று வான் புகழ் கொண்டாள் தமிழன்னை. வள்ளுவன் சங்க காலச் சான்றோர்களின் எவரெஸ்டுக் கொடுமுடியாக நின்று புரட்சிக் கருத் துக்களை—புதுமைக் கருத்துக்களை அள்ளி வீசுகிறான்.

....அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு;

....மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று;

யான் எனது என்னும் செறுக்கறுப்போன் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்;

எவ்வ துறைவ துலகம் உலகத்தோடு
அவ்வ துறைவ தறிவு;

தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்;

பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாம் தலை.

நான் மேலே தந்துள்ள குறளடிகளில் ஏழேழுல கத்திற்கும் வழிகாட்டவல்ல வள்ளுவன் ஆனந்தக் காட்சியளிக்கிறான் என்பது எனது அழுத்தமான கருத்து.

## நிகரிலா கூட்டு மேதை

வள்ளுவனின் கருத்துப் புரட்சியை இன்றைய உலகத்தில் தலைசிறந்த தத்துவ ஞானிகளில் ஒரு வராகப் பெருமதிப்புப் பெற்றுள்ள ஆல்பர்ட் ஷுவைஸ்டர் என்ற சிந்தனையாளர் தமது

''இந்தியச் சிந்தனையும் அதன் வளர்ச்சியும்'' (Indian thought & its development) என்ற ஆராய்ச்சி வல்ல நூலில் பிரமாதமாக பாராட்டு கிறான். வேத கால ரிஷிகளோடும், உபநிடத்து முனிவர்களோடும், கீதை ஆசிரியன் கண்ணனோடும் வள்ளுவனை ஒப்பு நோக்கி, வள்ளுவன்போல் மற்ற யாரும் மனித வாழ்வை அத்துணை உறுதிப்படுத்திக் கூறவில்லை என்று முடிவு கட்டிச் சொல்கிறான்.

வள்ளுவனுக்கு நிகரான ''கூட்டு மேதை'' (Synthetic Genius) அக்காலத்திலும் பூவுலகெங் கணும் துருவி துருவி நோக்கினும் விரல் விட்டு எண்ணுமளவுக்குக்கூடக் கிடையார் என்பதே எனது கருத்து.

வள்ளுவன் காலத்திற்குப்பின் இளங்கோவடி கள்—கூலவாணிகன் சாத்தனார் காலத்தில் தமிழ கத்தின் சமுதாய வாழ்வில் திட்டவட்டமான மாறு தல்கள் ஏற்பட்டன. இந்த மாறுதல்களை அடிப் படையாகக் கொண்ட கருத்துப் புரட்சியின் எதிரொலிதான் சிலப்பதிகாரமும், மணிமேகலையு மாகிய தமிழ் இலக்கியச் செல்வங்கள். இவ்விரு ஒப்பற்ற காவியங்களிலும் சமண. பௌத்தக் கருத் துக்கள் நல்லிடம் பெற்றுள்ளன.

இனி மத்திய காலத்திற்கு வருகிறேன். தமிழின் சரியான இரட்டையர்களில் ஒருவரான கம்பனுக்கு வருகிறேன்.

## மக்கள் உயிர்

தமிழ் சமுதாயத்தில் கம்பன் காலம் வரையில் அரசனே சமுதாய வாழ்வின் உயிர். ''மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'' (புறநானூறு), ''மாநில மன்னன் அடிதழீஇ நிற்கும் உலகு'' (வள்ளுவர்), கல்வியில் பெரிய கம்பன் ''உயிரெல்

லாம் உறையும் ஓர் உடம்பும் ஆயினன்'' என்று தசரத மன்னனை வருணித்து மக்களை உயிராவும் மன்னனை உடம்பாகவும் ஆக்கித் தெள்ளத் தெளிவான கருத்துப் புரட்சியை செய்கிறன்.

வசிட்டன் இராமனுக்கு அரச நீதி கற்றுக் கொடுக்கும் சந்தர்ப்பத்திலும்,

''வய்யம் மன்னுயிராக, அம்மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனுக்கு
அய்யமின்றி அறங்கடவாது அருள்
மெய்யின் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ?

என்று பாடி கம்பன் இன்றைய ஜனநாயகக் கருத்தை அன்றே வெளியிடுகிறன்.

''உழுங்குலத்தில் பிறந்தாரே
உலகுய்யப் பிறந்தாரே''

(ஏரெழுபது)

என்று பாடி கம்பன் அன்று உழவர் தோழனக விளங்கினன்.

## ஜனசக்தியின் வலிமை

தசரதன் ஆணையாகக் கைகேயி சொல்ல, இராமன் காட்டுக்குப் புறப்பட்டான் என்று அறிந்ததும் வெகுண்டெழுந்த அயோத்தி மக்கள்,

''புற்றுடைய காடெல்லாம்
நாடாகிப் போம்''

என்று வீரம் பேசினர் என்று கம்பன் பாடி ஜன சக்தியால் உலகை ஆக்கவும், அழிக்கவும் முடியு மென்பதில் தனக்குள்ள அழுத்தமான நம்பிக்கையை உலகறியச் செய்கிறன்.

''எல்லாரும் எல்லாப் பெரும் செல்வமும் எய்தலாலே
இல்லாருமில்லை உடையாருமில்லை மாதோ''

என்று கவிச்சக்கரவர்த்தியான கம்பன் அயோத்தியைப் பற்றிப் பாடிய கருத்து—புரட்சிக் கருத்து—புதுமைக் கருத்து என்பதை யாரும் மறுக்கார் என்பது மட்டுமன்று அவனது தொலைநோக்கும் பேராற்றலை உணர்ந்து மூக்கில் விரல் வைத்து வியப்பர்.

''யாரொடும் கொள்ளிலன் என்றபின்
போரொடுங்கும் புகழ் ஒடுங்காது''

இவ்வாறு கம்பனின் வசிட்டன், கம்பனின் இராமனுக்கு வழங்கிய அறிவுரையில் கருத்துப் புரட்சி கொழுந்தோடியிருப்பதை யாரும் எளிதில் காணமுடியும்.

அவன் காலத்தில் சமுதாயச் சூழ்நிலை கம்பனுடைய கருத்துப் புரட்சிக்குப் பெருந்துணை போயிற்று என்று சுருங்கச் சொல்ல விரும்புகிறேன்.

## பாரதி இலக்கியத்தின் சிகரம்

இந்த நூற்றாண்டில் பாரதிக்கு வருகிறேன். அந்நிய ஆட்சி, காலனி நாட்டு முறை, நமது சமுதாயத்தில் ஏற்படுத்திய பெரும் மாறுதல்கள், உலக ஜனநாயக, சமதர்ம இயக்கம்—இவை தமிழ் இலக்கியத்தில் கருத்துப் புரட்சிக்குப் பாட்டுக்கொரு புலவனை பாரதியைத் தனிப் பெரும் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்தன. பாரதி, தேசியக் கவியாக, விடுதலைக், கவியாக மக்கள் கவியாக இலக்கியம் சமைத்தான்.

சென்ற நூற்றாண்டிலும், இந்த நூற்றாண்டிலும் உலகில் எந்தப் பகுதியில் எழுந்ததாயினும் புத்தம் புதிய கருத்துக்களை பாரதியின் இலக்கியம் இழுக்காதிருந்ததில்லை.

''புரட்சி'' பொது உடைமை என்ற உலக நவீன கருத்துக்கள் நிறைந்த உயிர் துள்ளியாடுகிற செஞ்

சொற்களை தொன்மையும், பெருமையும், வண்மையும் சான்ற தமிழ்ப் பேரிலக்கியத்திற்கு வழங்கிய வள்ளல் பாரதி.

பாரதியின் இறுதிப்பாட்டு '**பாரத சமுதாயம் வாழ்கவே**' என்பது. அதில்,

"முப்பது கோடி ஜனங்களின் சங்க
முழுமைக்கும் பொது உடைமை
ஒப்பில்லாத சமுதாயம்
உலகத்துக்கொரு புதுமை"

என்று பாடுகிறான். அதில்,

"எல்லாரும் இந்நாட்டு மக்கள்
எல்லாரும் ஓர் நிறை எல்லாமே ஓர் விலை
எல்லாரும் இந்நாட்டு மன்னர்''

என்று பாடுகிறான்.

தமிழ் இலக்கியத்தில் கருத்துப் புரட்சியில் பாரதி இலக்கியத்தின் சிகரம் இது.

[மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழா மலரிலிருந்து எடுக்கப்பட்டது.]

## பாட்டாளி பற்றி தமிழ் இலக்கியப் பார்வை

சங்க காலம் தமிழன் வரலாற்றில் பொற் காலம் என்கிறார்கள். கிறிஸ்து பிறப்பதற்கு முன் பும், பின்புமாக சுமார் 500 ஆண்டுகள் சங்க இலக் கியத்தின் பொற்காலம்.

இந்தக் காலத்தில் நூற்றுக்கணக்கான சான் றாண்மை மிக்க புலவர் பெருமக்கள் ஒப்பற்ற கவிதை கள் பாடி தமிழனின் நாகரிகம், பண்பாடு, வாழ்க் கைத்திறன் ஆகியவை பற்றிய பண்பட்ட கனிந்த உண்மைகளை நூற்றுக்கணக்கான அழியா எழிலோ வியங்களைத் தீட்டித் தந்திருக்கிறார்கள். இந்த இலக்கியப் படையல்களையே நாம் சங்க இலக்கியம் என்கிறோம்.

சங்க கால புலவர்களுக்கெல்லாம் அவர் தம் புலமைகளுக்கெல்லாம் ஒரு தனிப் பிரதிநிதியாகப் பேரொளி வீசி நிற்கும் சகச்சோதி வள்ளுவப் பெருந்தகை. இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் வாழ்ந்து தமிழ், ஆங்கிலப் புலமை மிக்கு தமிழ் இலக்கியப் பெரும்பணி புரிந்த செல்வகேசவராய முதலியார் என்ற தமிழ்ப் பெரியாரும் தமிழன் '**கதி**' கம்பனும், திருவள்ளுவரும் (க-கம்பன் தி-திரு வள்ளுவர்) என்று விநோதமாகக் கருத்துரை தந்து தமிழிலக்கியத்தில் வள்ளுவனின் இடத்தை நமக்குக் காட்டியிருக்கிறார்.

ஆகவே, வள்ளுவனின் கருத்து அன்றையத் தமிழனின் தலைசிறந்த கருத்தாகும். இனி வள்ளுவன்

தமிழ்ப் பேராசான் பாட்டாளியைப் பற்றி என்ன சொல்கிறான் என்று பார்ப்போம். தொழில்களிலெல்லாம் பெருந்தொழிலாகிய உழவைப் பற்றி அவன் என்ன கூறுகிறான் என்று பார்ப்போம்.

'உழவே தலை' என்பது வள்ளுவனின் முற்ற முடிந்த முடிவு. ''உழுவோர், உலகத்து அச்சாணி'' என்பது வள்ளுவன் கண்ட உண்மை. எனவே, ''உழுதுண்டு வாழ்வரே வாழ்வர், மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்'' என்று பாட்டாளியின் பெருமையைப் பெருமிதத்தோடு பாரறியப் பறை சாற்றுகின்றான்.

நிலத்துக்கு உடையவரை அல்ல. நிலத்தை உழுது உண்டு வாழ்பவரைப் பெருமைப் படுத்துவதும் 'உழவே தலை' என்று அறுதியிட்டு உறுதி கூறுவதும், வள்ளுவன் பாட்டாளி மக்களைக் கொண்டாடும் பாவலனே என்பதையும், தமிழன் பண்பாடு பாட்டாளிக்கு நன்மதிப்புச் செலுத்துவதே என்பதையும் பட்டப்பகல் வெட்ட வெளிச்சமாக்குகின்றது.

மத்திய காலத்தில் தமிழ்ப் பெரு மக்களின் கவிச் சக்கரவர்த்தியாக ஒளிவிட்டவன் கம்பன். தனக்கு முந்திய காலத்துத் தமிழ் அறிவையும், தமிழ் பண்பாட்டையும் தன்வயமாக்கிக் கொண்ட அரும் புலவன் கம்பன். தமிழின் கதியான இருவரில் ஒருவன் கம்பன். வள்ளுவர் தமிழர் வாழ்க்கைக்கு இலக்கணம் அருளினன் என்றால் கம்பன் அதற்கு இலக்கியம் அருளினன் என்பார் தமிழறிந்தார். அவன் தமிழ்ப் பேரரசு தாயக எல்லைத் தாண்டி மட்டுமல்ல, கடல்தாண்டி கொடி பரத்தி புகழ் பரப்பிய காலத்தில் வாழ்ந்தவன். தமிழனின் கலையும் கலாச்சாரமும், ஆர்ப்பாட்ட வாழ்வும், பல துறைச் சாதனங்களும் சிகரத்தைத் தொட்டு சிறப்புற்று நின்ற காலத்தில் வாழ்ந்தவன்.

இத்தகைய கம்ப நாடுடைய வள்ளல், பாட்டாளியை—அன்றைய உழவர் திருமகனைப் பாடுவதை நாம் பார்ப்போம். தமிழ் இலக்கியத்தில் தமிழனின் பொன்னனைய சமுதாய வாழ்வில் அவன் ஆழ முக்குளித்துக் கண்டெடுத்த அரிய உண்மையை நாம் பார்ப்போம்.

உலகம் உய்வது, 'தொழுங் குலத்தில்' பிறந்தோரால் அல்ல; 'சுடர்மிகுமன்னவராகி எழுங்குலத்தில்' பிறந்தோரால் அல்ல; 'வணிகரெனும் செழும் குலத்தில்' பிறந்தோரால் அல்ல என்று எதிர் மறையில் முதலில் கூறுகிறன். இந்தக் கூற்றின் மூலம் சொற் பொருள் வன்மையின் வேகத்தை வளர்த்து ''உழுங் குலத்தில் பிறந்தோரே'' என்று கம்பன் ''ஏரெழுபதில்'' பாடுவது அற்புதத்திலும் அற்புதம். அந்தணர்-அரசர்-வணிகர்-வேளாளர் என்ற சாதீய சமுதாயத்தில் அடித்தட்டிலுள்ள பாட்டாளிகளான உழவர்களைக் கம்பன் உச்சிமேல் வைத்து ஓங்கு புகழ்ச் சூட்டுவதில், சுடரடிக்கும் தமிழ்ப் பண்பு இன்று நம்மால் உன்னி உன்னி ஓரத் தக்கது.

இன்னொரு தனியினில், ''என்றும் காப்பாரே வேளாளர் காண்'' என்று பாடுவதும், நமது சிந்தனைக்கு அரும் விருந்தளிப்பதாயிருக்காது. இங்கு ''வேளாளர்'' என்று கம்பன் கூறுவது கார் காத்த வேளாளர், கொங்கு வேளாளர் என்பது மாதிரி அல்ல. வேளாண்மைத் தொழில் புரிபவரையே கூறுகிறன், கன்னித் தமிழ் வளர்த்த கம்பர் பெருமான்.

வேளாளர் குலத்திற்குப் புகழ் பாடும்போது உடைய குலத்திற்குப் பாடவில்லை. 'உழுங் குலத்திற்கே' பாடுகிறன் என்பதை நாம் ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

இராம காதையில் தசரதனின் செங்கோலை அமர சித்திரம் தீட்டிக் காட்டும்போது, கற்பனைக் கடலான கம்பன் ''வறிஞர் ஓம்பும் ஓர் சேய்'' என உவமித்துக் காட்டுகிறான். இங்கு உழைப்பின் பெருமையை கம்பன் இமயமலை உச்சியில் ஏற்றி வைத்துப் போற்றுவது யாரும் கண்குளிரக் காணத் தருவதாகும்.

பிறிதோரிடத்தில் இராமன் காடேகுவதைக் கேட்ட அயோத்தி மக்கள் தசரதன்மீது ஆத்திரமடைந்து தாறுமாறாகப் பேசுவதில் மக்களின், உழைக்கும் மக்களின் சர்வ வல்லமையையும் ஆணித்தரமாக எடுத்துக் கூறுவதாகக் கம்பன் தனது கற்பனைத் திரையில் ஒரு படம் தீட்டுகிறான். அதில் ''புற்றுடைய காடெல்லாம் நாடாகப் போம் என்பார்'' என்று பாடுகிறான். மக்களின் உழைப்பு புற்றும் புதரும் மண்டிக் கிடக்கும் காட்டைக் கூட அயோத்தி போன்ற நாடு நகரமாக்கிவிடும் என்ற கம்ப சித்திரம் உழைப்புக்கு மணிமகுடம் சூட்டுகிறது.

தமிழ் இலக்கியத்தின் தனிப்பெருந் தாய் ஔவை. தமிழன் கண்ட வாழ்க்கை பற்றிய அரும் பெரும் உண்மைகளையெல்லாம் ஔவைப் பிராட்டி அமுதத் தமிழில் தாய் குழவிக்குப் பால் புகட்டுவதுபோல் தமிழினம் நீடுவாழப் புகட்டியிருக்கிறாள்.

இந்தத் தமிழ்ப் பெருமகள், உழைப்பின் மகத்துவத்தை நிறை செல்வத்தை உலகம் உள்ளளவும் பாராட்டப் பாடுவதை இனி நாம் பார்ப்போம்.

''வரப்பு உயர நீர் உயரும்
நீர் உயர நெல் உயரும்
நெல் உயர குடி உயரும்
குடி உயரக் கோல் உயரும்
கோல் உயரக் கோன் உயரும்''

இந்தப் பாடல் ஔவை கிழவியின் ஒரு தனிப் பாடல். ஆட்சியும் அரசாங்கமும் உயர்வதற்கு ''வரப்பு உயர வேண்டும்.'' அதாவது உழவனின் உற்சாகமிக்க உழைப்பு தங்குதடையற்று நடை பெறவேண்டும் என்ற உண்மையை தமிழாசிரிய ரான ஔவை, ஓர் அரசனை வாழ்த்தும் வாய்ப்புக் கிடைத்தபோது நுட்பம்பட வலியுறுத்துகிறாள். உழைப்பின் பெருமையைப் பற்றிய ஔவையாரின் கண்ணோட்டம் — பண்பட்ட தமிழனின் கண் ணோட்டம்—தமிழர் நாகரிகத்தின் கண்ணோட்டம் இதில் தெள்ளத் தெளிவாகப் புலனாகிறது.

மற்றொரு பாடலைப் பார்ப்போம். இந்தப் பாட்டும் ஒரு தனியனே. இந்தப் பாட்டில் ஔவை எந்த அரசு நல்ல அரசு என்ற கேள்வியைக் கிளப்பி, அதற்குப் பதிலும் சொல்லுகிறாள். இதில் நான்கு சாதியினர் அரசையும் குறிப்பிட்டு அந்தணர்-அரசர்-வணிகர் அரசு சமுதாயத்திற்குத் தீமைதான் விளைக்கும் எனக் காரணம் காட்டி உழவர் அரசே நல்லரசு என்று முடிவுகட்டிக் கூறுகிறாள்.

''—நாலாமவன்
மந்திரியும் ஆவான்
வழிக்குத் துணையாவான்
அந்த அரசே அரசு''

என்றுகூறி பாட்டாளிகளின் அரசுதான் அரசு என்று சொல்வதற்குத் தகுதியுடைய அரசாகும் என்று அறிவுறுத்துகிறாள். ஔவையின் சமுதாயக் காட்சி இன்று நமக்கு நேர் நிகரற்ற நீதிக் காட்சியாகப் புரிவது போல் அன்றும், அப்பால் என்றும், எவர்க் கும் புரிந்திருக்க முடியாது.

மேற்கூறிய மாபெரும் புலவர் பெருமக்களின் வழித்தோன்றலாகவும் தமிழ்ப் பண்பாட்டின் தனிப்பெரும் பிரதிநிதியாகவும் தமிழ் மறுமலர்ச்சி

யின் முன்னணிச் சிற்பியாகவும் புதுமைப் புரட்சிக் கவிஞனுகவும் பாரதி இந்த நூற்ருண்டில் வாழ்ந் தான். பாரதி சர்வதேச தொழிலாளர் இயக்கத் தையும் சோஷலிசச் சித்தாந்தத்தையும் ரஷ்யாவில் நடந்த சோஷலிஸ்டுப் புரட்சியையும் தெரிந்து கொள்ளும் வாய்ப்புப் பெற்றிருந்தான்.

''உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம்-வீணில்
உண்டு களித்திருப்போரை
நிந்தனை செய்வோம்''

என்ற பழம்பெரும் பண்புக்கு முரண்படாத புதுயுகக் கொள்கையைப் பாடினுன் பாரதி. புத்தம் புதிய தொழில்களை யெல்லாம் தீர்க்கத் தரிசனத் துடன் வரவேற்று வாழ்த்திப் பாடினுன் பாரதி. தொழிலைப் பற்றி இவ்வாறு பாடிய பொழுதே தொழிலாளிப் பெருமக்களைப் பற்றியும் வள்ளுவன்-கம்பன்-ஒளவை வழியில் நின்றுகொண்டு புதுமைத் தேனில் குழைத்து தொழிலாளர் பெருமையைப் பாடினுன்.

''அரும்பும் வியர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரம் தொழில் செய்திடுவீரே
பெரும் புகழ் உமக்கே இசைக்கின்றேன்
பிரம்மதேவன் கலையிங்கு நீரே''

என்றும்,

''தேட்டமின்றி விழிஎதிர் காணும்
தெய்வமாக விளங்குவீர் நீரே''

என்றும் பாடுகிருன்.

ஆயிரமாயிரம் தொழில் புரிந்து புவியைப் புதுமைப்படுத்தும் புது உலகச் சிற்பிகள் தொழி லாளர்கள் என்று எத்துணை சந்தம் சிந்த அழ கொழுகப் பாடுகிருன் பாரதி!

தமிழ்ப் பண்பாட்டுக்கும், புது உலகக் கொள் கைக்கும் பிரதிநிதியாக பாரதத்திற்கும் தமிழ் நாட்டுக்கும் விளங்கிய பாரதிக் கவிஞன் ஆவேச மாக விடுதலை முழக்கம் செய்கிறபொழுது,

"திறமை கொண்ட தீமையற்ற
தொழில் புரிந்து யாவரும்
தேர்ந்த கல்வி ஞானமெய்தி
வாழ்வம் இந்த நாட்டிலே"

என்று முழங்குகிறான்.

சென்ற மே நாளிலிருந்து இந்த மே நாள் வரையில் தோட்டத் தொழிலாளியும், பஞ்சாலைப் பாட்டாளியும், பீடி, நகரசுத்தி உழைப்பாளர்களும், இன்ஷூரன்ஸ் ஊழியனும், கிராம ஊழியரும் தமிழ கத்தில் புதிய வெற்றிகளையும், சாதனைகளையும் பெற்றிருக்கிறார்கள். இன்று புதிய தமிழகம் பூத்திருக்கிறது.

ஆகவே சர்வதேச பாட்டாளி மக்களின் நாளாகிய இந்த மே திருநாளில் தொழிலாளர் பெருமக்களை அவர் தம் தொன்மையான தமிழ்ப் பண்பாட்டையும், உழைப்பிற் கனிந்த பெருமையை யும் கவனத்தில் இருத்தி புதிய தமிழகத்தை உருவாக்கச் சபதம் ஏற்பமாக.

## வள்ளுவர் நாடு எது?

வள்ளுவப் பெருந்தகை தமிழர். அவர் தம் நாடு தமிழ் நாடு—இந்த உண்மையில் சந்தேகம் முளைத்து, அந்தச் சந்தேகத்தின் காரணமாக இந்தக் கட்டுரையின் தலைப்பு எழவில்லை.

திருவள்ளுவனின் நாடு, தமிழ் நாடா, வேறு என்ற கேள்விக்கு நம்மைப் பொறுத்த மட்டில் கொஞ்சமும் இடமில்லை. பின் மேற்படி தலைப்புக்கு இடம் ஏன்?

புத்தாண்டு மலருக்கு ஒரு கட்டுரை வரைய வேண்டும் என்ற தேவையும், கடமையும் பளிச் சிட்டன. இன்றைய தமிழகச் சூழ்நிலையின் படம் என் மனத்திரையில் தோன்றி மறைந்தது.

தமிழகம், ஐக்கியத் தமிழகம், தமிழ்நாடு, தமிழரசு, திராவிட நாடு, நாம் தமிழர் முதலிய சொற்களும், சொற்றொடர்களும் அவற்றை அடி யொற்றி எதிரொலிக்கும் எண்ணங்களும், கருத் தோட்டங்களும் என் உள்ளத்தில் மாறி மாறி அலை மோதின.

நாடு பற்றிய பல்வேறு கருத்தோட்டங்களில் மொத்துண்டு, குழப்பபடியில் சிக்குண்டு கிடக்கும் தமிழ்ப் பெரு மக்களுக்கு இந்தப் புத்தாண்டுப் பிறப் பின் செய்தி எதுவாக இருக்க முடியும் என்று சிந்தித்தேன்.

திருக்குறளின் 74வது அதிகாரமாகிய 'நாடு' என்ற அதிகாரம் என் மனதில் பட்டுத் தெறித்தது.

அந்த அதிகாரத்தின் பத்து குறட்பாக்களையும் ஒரு முறைக்குப் பன்முறை நினைத்தேன். அவற்றில் கொழுந்தோடிப் படர்ந்து கிடக்கும் கருத்துக் களைப் பிழிந்து அந்தப் பிழிவை புத்தாண்டு பிறந்த நாளின் விருந்தாகச் செய்வதென விரும்பினேன்.

இங்கு, வள்ளுவப் பேராளரின் 'நாடு' பற்றிய சில முக்கியமான கருத்துக்களைத் தீட்டுகிறேன்.

1. முதலில் ஒரு நாடு-சரியான இலக்கண முடைய நாடு என்று சொல்லத்தக்க வண்ணம் விளங்க வேண்டுமென்றால், அது எந்த எந்த உடைமைகளை உடையதாயிருக்க வேண்டும் என் பதை ஆசிரியப் பெருமான் விளக்குகிறார்.

குறையாத விளைபொருளும், தக்க அறிவு அறிந்த மக்களையும், தாழ்விலாச் செல்வரையும் உடையதாயிருக்க வேண்டும் என்று தெளிவாக எடுத்துக் காட்டுகிறார்.

இங்கு தாழ்விலாச் செல்வர் என்று யாரை வள்ளுவர் வரையறுத்துக் காட்டுகிறார் என்பதைக் கூர்ந்து கவனிக்கும்படி தமிழ் மக்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

வள்ளுவப் பேரறிஞர் யாரைத் தாழ்விலாச் செல்வர் என்று குறிப்பிடுகிறார் என்பதை அறிய நாம் எல்லோரும் மிகமிக விரும்புவோம் என்பதில் ஐயமில்லை.

ஓரிடத்தில் உழுதுண்டு வாழ்கின்றவரே உரிமை யோடு வாழ்கின்றவர் என்றும், மற்றவர் எல்லோரும் பிறரைத் தொழுது உண்டு பின் செல் கின்றவர் என்றும் கூறுகிறார்.

“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்—மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்”

—குறள்: 1033

மற்ருேரிடத்தில் கைத் தொழில் செய்து உண்ணும் தொழிலாளர்கள் பிறரிடம் சென்று இரக்க மாட்டார் என்றும், தம்மிடம் இரப்பவர்க்கு ஒளிக்காமல் ஈவார் என்றும் கூறுகிருர்.

“இரவார் இரப்பார்க்கொன்று ஈவர்—கரவாது
கைசெய்தூண் மாலை யவர்”

—குறள்: 1035

மேற்காட்டிய இரண்டு குறட்பாக்களும், வள்ளுவப் பெருந்தகை உழவர்களையும், தொழிலாளர்களையுமே தாழ்விலாச் செல்வர் என்று கருதுகிருர் என்ற உண்மையைத் தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றன.

“அவனே புலவன் அவனே அறிஞன்
அவனே தமிழை அறிந்தோன்”

என்று அன்றும் இன்றும் என்றும் உச்சியில் வைத்து மெச்சப்படும் வள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாடென்று கூறத்தக்க லட்சிய நாட்டில் ‘தாழ்விலாச் செல்வர்’ உழவர்களும் தொழிலாளர்களுமே என்றது புத்துணர்ச்சிக்குப் பெருவிருந்தும், அருவிருந்துமாகும்.

“நாடு” என்ற அதிகாரத்தின் முதல் குறட்பா,

“தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு”

என்பதாகும் இந்தக் குறட்பா, ஒரு நாட்டின் சிறப்புக்கு முதலிடம் பெறத்தக்கது அதன் உள்ளுரை (Content). அதாவது சேர்மானந்தான் என்பதை வலியுறுத்துகிறது என்பதை தமிழ் மக்கள் ஊன்றி உணர வேண்டும்.

இந்த அதிகாரத்தில் வள்ளுவப் பெருந்தகை மற்றொரு கருத்தை வற்புறுத்துகிறார். அதாவது கொடிய பசியும், தீராத பிணியும், வெளிப் பகை யும், இன்ன பிற தீம்புகளும் இல்லாதிருப்பதே சிறந்த நாடு என்கிறார்,

''உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு''

—குறள்: 734

இந்தக் குறட்பாவிலும் நாட்டின் உள்ளுறை யையே வற்புறுத்துகிறார் என்பது கவனிக்கத் தக்கது.

பிறிதொரு குறட்பாவின் மூலம் நாட்டின் அழகுகளை அருமையாக எடுத்துக் காட்டுகிறார். பிணியில்லாமை, செல்வம், விளைவு, இன்பம், காவல் இவ்வைந்தும் எந்த ஒரு நாட்டுக்கும் அழகுகள் என்று குறிப்பிடத் தக்கவை என்று வள்ளுவனார் அழகுறச் சுட்டுகிறார்.

இந்தக் குறட்பாவும், நாட்டின் உள்ளடக்கக் கூறுகளைத்தான் முதன்மைப்படுத்திக் கூறுகிறது.

''நாடு'' என்ற அதிகாரத்தின் இறுதிக் குறட் பாவில் வேறொரு மிக முக்கியமான கருத்தை வள்ளுவர் வெளியிடுகிறார். அதாவது மேற்கூறிய எல்லா உள்ளுறை வளப்பங்களும் பொருந்தியிருந் தாலும் நாடாளும் அரசன் நல்ல அரசனாக இல்லா விட்டால் அந்த நாடு ஒரு பயனும் அடையாது என்று அறுதியிட்டுக் கூறுகிறார்,

''ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு''

—குறள்: 740

இதுவரை ஒரு நாட்டின் உள்ளடக்கக் கூறுகளை வலியுறுத்தி வந்த வள்ளுவப் பேராசான் இறுதியாக

அவற்றுள் மிக முக்கியமானதான ஆட்சியின் செங்கோன்மையை மிகவும் வற்புறுத்துகிறார்.

அன்று வள்ளுவர் ''குடி தழுவிய கோல்'' என்றார். பின்னர் கம்பன் ''கோன் நிகர் குடிகள்'' என்றார். அப்பால் நம் நூற்றாண்டில் பாரதி,

''குடிமக்கள் சொன்னபடி
குடிமக்கள் மேன்மையுறக்
குடிமை நீதி''

என்று விளக்கினான். இன்று நாம் ''மக்கள் குடி அரசு'' என்கிறோம்.

வள்ளுவர் தாம் பாடிய 1330 அருங்குறட்பாக்கள் ஒன்றிலேனும் தமிழ், தமிழகம், தமிழன், தமிழினம் என்று குறிப்பிடவே இல்லை. தமிழனைப் பற்றியே குறிப்பிடவில்லை எனும்போது திராவிடனைப் பற்றிய பேச்சுக்கே இடமில்லை.

இதிலிருந்து தெரிவது என்ன? வள்ளுவர் கண்ட நாட்டைப் பற்றிய பொதுமைக் காட்சி உலகம் முழுவதற்கும் பொருந்தும் என்பதுதான். அது தமிழகத்திற்கு மிக மிகப் பொருந்தும் என்று சொல்லவே தேவையில்லை.

வள்ளுவர், நாட்டின் அழகுகள் எவை? நாட்டின் சேர்மானம் எப்படி? நாட்டிற்கு ஆகாதவை எவை? நாட்டின் அரசு எப்படி என்பவைகளுக்கே முதலிடம் அளித்துப் பேசுகிறார். பிறநாட்டு மக்களோடு பகைக் கொளல், ஒரு நாடு பிரிந்து தனித்து இயங்குதல், ஒரு நாட்டின் உருவத்தை (பெரிது, சிறிது) முதல் தரமாகக் கொண்டு போராடல் முதலிய போக்குகள் வள்ளுவருக்கு சற்றும் உடன்பாடல்ல. அதாவது தமிழனின் பேரறிவுக்கும், பண்பாட்டுக்கும் உடன்பாடல்ல.

மற்ற நாட்டு மக்கள் ''குடியேறுங்கால் ஏற்படும் சுமையைத் தாங்கி அரசனுக்கு இறை தர வல்லது நாடு'' என்கிறார் வள்ளுவர். ஓரிடத்தில்,

''பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
இறையொருங்கு நேர்வது நாடு''

—குறள்: 733

பிறிதோரிடத்தில் உலகம் எப்படி முன்னேறி வாழ்கிறதோ அப்படி வாழ்வதுதான் அறிவுடைமை என்று கூறுகிறார் வள்ளுவர் ஒத்து வாழாதவன் செத்தவனுக்கு ஈடாவான் என்றும் வற்புறுத்துகிறார்,

''எவ்வ துறைவ துலகம் உலகத்தோடு
அவ்வ துறைவது அறிவு''

—குறள்: 426

''ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்''

—குறள்: 214

சுருக்கத்தில், பிரிவினையிலும் தனித்தியங்கலாலும் அல்ல உள்ளுறையையும், ஆட்சியையும் சரியாக அமைத்துக் கொள்வதிலேயே நாட்டின் விடுதலையும், நல்ல வாழ்வும் அடங்கிக் கிடக்கிறது.

வள்ளுவர் பிரிவினைக் கதைக்கு ஆதரவு தரவில்லை; புதிய அமைப்புப் பாதைக்கே ஆதரவு அளிக்கிறார்.

---

